.P.H.

# மறுமலர்ச்சித் தமிழ் வாசகம்

## மூன்றாம் படிவம்

























பப்ளிஷிங் ஹௌவுஸ்
த்தெரு, சென்னை — 1.

# மறுமலர்ச்சித் தமிழ் வாசகம்

மூன்றும் படிவம்




ஆக்கியோர் :

பண்டிதை திரு. S. கிருஷ்ணவேணி அம்மாள்

முன்னைத் தலைமைத் தமிழாசிரியை

லேடி வில்லிங்டன் உயர்தரக் கலாசாலை, திருவல்லிக்கேணி.

&

இனியன்

பதிப்பாசிரியர் :

வித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்கள்.

பேராசிரியர் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.
அவர்கள் முகவுரையுடன்.

டீச்சர்ஸ் பப்ளிஷிங் ஹௌஸ்

53-56, பவழக்காரத் தெரு :: சென்னை, 1.

1949

பதிப்புரிமை] [விலை ரூ. 1-0-0

# முகவுரை

மறுமலர்ச்சித் தமிழ் வாசக வரிசையில் எட்டாம் வகுப்புப் புத்தகத்தைப் பார்வையிட்டு மகிழ்ந்தேன்.

இவ்வாசக நூலிலுள்ள பாடங்கள் அரசாங்கத்தினர் வெளியிட்டிருக்கும் பாடத்திட்டத்திற்கு இணங்க எழுதப்பட்டுள்ளன. பாட விஷயங்களிற்சில தமிழ் நாட்டுப் பூர்வ காலத்திற்கு உரியனவாயும், சில தற்காலத்திற்கு உரியனவாயும், சில விஞ்ஞானம் பற்றியனவாயும் அமைந்திருக்கின்றன. அனைத்தும் மாணவர்களது அறிவு வளர்ச்சிக்கு மிகவும் ஏற்றன.

இந்நூலில் பயின்று வரும் தமிழ்நடையும் மிகவும் திருப்திகரமாயுள்ளது. இலக்கணப்பிழை யாதுமின்றி, நல்ல தமிழில் மாணவர்களது உளங்கவரும் முறையில், அவர்கள் ஊக்கங்கொண்டு படிக்குமாறு பாடங்கள் நன்றாக எழுதப்பட்டிருக்கின்றன.

தேவாரம், திருப்புகழ் முதலிய பக்தி நூல்கள்; திருக்குறள், நாலடியார் முதலிய நீதி நூல்கள்; நளவெண்பா, பஞ்ச தந்திரம் முதலிய கதைகள்; குமரேசசதகம் முதலிய நூல்கள், குறவஞ்சி முதலிய பிரபந்தங்கள், தனிப்பாடல்கள் இவற்றினின்றும் செய்யுட்பாடங்கள் எடுக்கப்பட்டுள்ளன. தற்காலக் கவிஞருள் பாரதி, சுத்தானந்த பாரதி, தேசிக விநாயகம்பிள்ளை, ஆஸ்தான கவிஞர் இராமலிங்கம் பிள்ளை முதலியோரின் நூல்களினின்றும் பொறுக்கு மணிகள் இதிற்கோக்கப்பட்டுள்ளன.

பழமையினின்றும் தோன்றிய மறுமலர்ச்சியே மிகவும் சிறந்ததாகும். இந்நெறியைப் பின்பற்றி இவ்வாசகம் அமைந்துள்ளமை கண்டு மகிழத்தக்கது.

இந்நூல் மாணவர்களுக்கு மிகவும் பயன்படுமென்று உறுதியாய் நம்புகிறேன். இதன் ஆசிரியர்கள் கல்வியுலகின் பாராட்டுக்கு உரியவர்கள்.

சென்னை,
28-11-'49

எஸ். வையாபுரிப் பிள்ளை

# முன்னுரை

நம் நாட்டில் தற்போது தமிழ் முதல் மொழியாய் உள்ளது பலரும் அறிந்ததே. இதனால், மாணவர்கட்கு முன்னையினும் தமிழறிவு அதிகப்படும் என்பது திண்ணம். அதற்கேற்ப அரசாங்கத்தாரால் முதற்பாரம் முதல் ஐந்தாம் பாரம் வரை பாடத்திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. அதைப் பின் பற்றியே பாடப் புத்தகங்கள் எழுதப்படினும், அவை, அருஞ்சொற்களின் மிகுதி, செந்தமிழ் நடை, இன்பச் சுவை, பிழையற்ற பதிப்பு ஆகிய இவற்றைப் பெற்றிருத்தல் இன்றியமையாததாகும்.

இம்முறையில் பன்னாட்களின் அனுபவத்தை ஒட்டியும், இளைஞரின் கல்வி அறிவு முதலியவற்றின் பெருக்கத்தைக் கருதியும், புதிய பாடத்திட்டத்தில் குறிப்பிட்டுள்ள எல்லாப் பொருள்களையும் தொகுத்தும் முதல் மூன்று பாரங்களுக்கும் தனித்தனி நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

மாணவர்கள் இலக்கணக் கோட்பாடுகளை இலக்கண நூலில் படித்துக்கொள்வார்களாதலின், அவற்றையே இங்குக் கூறுவது மிகை எனக் கருதி, இந்நூலின் இலக்கியத்திலுள்ள இலக்கணங்களைக் கண்டுபிடிக்கும் பழக்கம் ஏற்படுதற்பொருட்டு, இலக்கணம் என்னும் தலைப்பின் கீழ்ச் சில பயிற்சிகள் தரப்பட்டுள்ளன.

இந்நூலின்கண்ணுள்ள 'பயிற்சி' என்னும் தலைப்பு, அருஞ்சொற்பொருள், வினாக்கள், இல்க்கணம் ஆகிய மூன்று தலைப்புகளிலுமுள்ள சிற்சில குறிப்புகளையும் தன்னிடங் கொண்டுள்ளது மட்டுமேயன்றி, ஒரு பாடத்தில் வகுப்பிற்கேற்ப எந்தெந்தப் பொருளைப்பற்றிக் கட்டுரை எழுதலாம் என்பதை மாணவர் அறிந்துகொள்ளும் வகையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

இந்நான்கு தலைப்புகளும் மாணவர் பாடத்தைத் தெள்ளத் தெளிதற்கு உறுதுணையாய் இருக்குமென்பது ஒருதலை.

தம்மால் இயன்றவரையிற் கண்ணுங்கருத்துமாய் நூல்களைப் பதிப்பிப்பதில் வல்லுநரான வித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளையவர்களைத் தமிழுலகம் நன்கறியும். அவர்கட்குப் பல வேலைகளிருப்பினும், அவற்றிற்கிடையில் இந்நூலையும் பதிப்பித்துத் தருதற்கு ஒப்புக்கொண்ட அவர்களது அன்புடைமை என்றும் மறக்கற்பாலதன்று. அவர்களுக்கு எம் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

எங்களை இப்பணியில் ஊக்குவித்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராயிருந்து அரும்பணி ஆற்றிய பேரறிஞர் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை, B.A., B.L., அவர்களுக்கும் எம் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

கவியோகி திரு சுத்தானந்த பாரதியாரைத் தமிழுலகம் நன்கறியும். அன்னார் தம் "பாரதி சொரூபம்" என்னும் பாடல்களைப் பிரசுரிக்க அன்புடன் அனுமதித்ததற்கு நாங்கள் என்றும் கடமைப்பட்டுள்ளோம். "சுதந்திர நாட்டின் சீர்மை" என்னும் கட்டுரைப் பகுதியைப் பிரசுரிக்க அன்புடன் அனுமதியளித்த "ஆனந்த விகடன்" ஆசிரியர் அவர்களுக்கும் எம் நன்றி என்றென்றும் உரித்தாகுக.

தமிழகம் இதை அன்புடன் ஏற்று மேலும் எங்களை இப்பணியில் ஊக்குவித்தருளின், அஃதொன்றே எமக்குப் பெருமகிழ்ச்சி அளிப்பதாகும்.

சென்னை<br>
28-11-'49

ஆக்கியோர்

# பொருள் அடக்கம்

## உரை நடை



## செய்யுள்

# மறுமலர்ச்சித் தமிழ் வாசகம்

எட்டாம் வகுப்பு



## 1. பால கங்காதர திலகர்

1. நம் இந்திய அன்னையார் அப்போதைக்கப் போது ஒவ்வொரு பெரியாரைத் தோற்றுவித்து, நாட்டையும் மக்களையும் முன்னேற்றுவதில் கருத்தூன்றியவர். அம்முறையில் இதுகாறும் பல சான்றோர் தோன்றித்தோன்றி மறைந்தனர். அவர்களுள் பால கங்காதர திலகரும் ஒருவர். இவர் தேசத் தொண்டில் தலை சிறந்தவர். இவரது தொண்டின் தூய்மையும், உயர்வும் பலர் மனத்தைக் கவர்ந்தன. ஆதலின், இவர் நாட்டுப்பற்றுடையவராய், 'லோக மானிய பால கங்காதர திலகர்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றார்.

2. இவர் பம்பாய் மாகாணத்தைச் சார்ந்த இரத்தின கிரி என்னும் நகரில் அந்தண குலத்தைச் சார்ந்த இராமசந்திர திலகருக்குப் புதல்வராய்த் தோன்றினர். இராமசந்திர திலகர் ஒரு பள்ளியில் ஆசிரியத் தொழில் புரிந்து வந்தார்.

3. திலகருக்கு இளமையிலேயே பள்ளிக் கூடப்படிப்புத் தொடங்கப்பட்டது. இவரை விரை

வில் உயர்ந்த கல்விமானாக்க வேண்டுமென்பது தந்தையாரின் விருப்பம். ஆனால், அஃது அவருக்குக் கை கூடிற்றில்லை. திலகர் பதினாறும் வயது எய்துவதற்கு முன்னரே தந்தையார் இவ்வுலக வாழ்க்கையை நீத்தனர். அத்துன்பம் இவரைப் பெரிதும் வருத்திற்று. ஆயினும், சுற்றத்தாரால் ஆறுதல் அடைந்தார்.



பால கங்காதர திலகர்

4. திலகர் தம் பதினாறும் ஆண்டில் மெற்றிக்குலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற்றார்; பின்பு பூனாவிலிருந்த தட்சண கலாசாலையில் சேர்ந்து, பி.ஏ. பரீட்சையில் தேறினார். இவருக்குச் சம்ஸ்கிருதம், மராத்தி ஆகிய இரு மொழிகளிலும் போதிய ஞானம் ஏற்பட்டிருந்தது. ஆயினும், இவருடைய கல்வியைக்காட்டிலும், இவருக்கமைந்திருந்த தரும சிந்தனை முதலிய நற்பண்புகளே பிறர் உள்ளத்தைக் கவர்ந்தன. இவருக்குப் பதினைந்தாம் வயதிலேயே மணம் முடிந்துவிட்டது.

5. இவர் காலத்தில் இரத்தின கிரியில் கள்ளர் பயம் அதிகம். ஆதலின், அவ்வூர் மக்கள் தங்கள் பொருள்களைப் பல இடங்களில் ஒளித்து வைப்பது

வழக்கம். அம்முறையில் திலகர் வீட்டார் தம் அணி களை அரிசிப்பானையில் மறைத்து வைத்திருந்தனர். புதியவராக இல்லத்திற்கு வந்த திலகரின் மனைவி யாருக்கு இது தெரியாது. ஒரு நாள் அவ்வம்மை யார் ஒரு பிச்சைக்காரனுக்கு ஒரு பிடி அரிசி இட்டனர். அதில் ஏதோ ஒன்று பளபளவென மின்னிற்று. அதை ஊன்றிப் பார்த்த அம்மையார், அஃதொரு மூக்குத்தி என்பதையறிந்ததும், திடுக் கிட்டவராய், அதைத் தம்மிடம் கொடுக்குமாறு பிச்சைக்காரனைக் கேட்டார். அவனும் அதைத் திருப்பிக் கொடுத்தற்குக் கையில் எடுத்தான். அதைச் சிறிது தொலைவிலிருந்து நோக்கிக்கொண் டிருந்த திலகர், அங்கு வந்து, "அதைக் கேளாதே! அவனுக்குக் கொடுத்த அரிசியோடு கலந்திருத் தலின், அது தருமப்பொருளைச் சேர்ந்ததாகும். ஒருவருக்குத் தருமமாக ஈந்தது, திரும்பவும் கேட்டுப் பெற்றுக்கொள்ளத்தக்கதன்று; ஏழை பிழைத்துப் போகட்டும்!" என்று கூறித் தம் மனை வியாரைத் தடுத்துவிட்டார். இதனால், இவர் இளமை யிலேயே அறச்சிந்தையும், உயரிய எண்ணமும் வாய்ந்திருந்தார் என்பதை அறிகின்றோமல்லவா?

6. திலகர் தம் கல்வியை முடித்ததும், உத்தி யோகத்தை நாடிச் சென்றாரில்லை; அங்ஙனமாயின், ஓர் உயரிய துறையில் தொழில்பெற்று ஏராளமான பொருளைத்திரட்டியிருப்பார். இவர் நெஞ்சம் தேசத் தொண்டிலேயே அழுந்தி, அதற்கேற்றவைகளையே நாடிக்கொண்டிருந்தது. அதற்கேற்ப, இவருக்கு

அகர்கர், சிப்ளங்கர், மகாதேவ கோவிந்த ரானடே முதலி யவர் நட்பினராயினர். இவர்கள் சேர்ந்து ஓர் ஆங்கில உயர்தரக் கலாசாலையை ஏற்படுத்தி னார்கள். அதில் பல மாணவர் கல்வி கற்றனர். அது நாளுக்கு நாள் முன்னேறிக்கொண்டே வந்தது. அத்துடன் நிற்க இவர் மனம் இடந்தரவில்லை. பொது மக்களுக்கு அறிவு புகட்டும் தொண்டைப் புரிய வேண்டும் என இவர் நெஞ்சம் விழைந்தது. ஆதலின், இவர், 'மராத்தா' என்னும் ஆங்கிலப் பத்திரிகையையும், 'கேசரி' என்னும் மாதப்பத் திரிகையையும் தொடங்கினர். இவை இரண்டும் பொதுவில் யாவருக்கும், சிறப்பாக மகாராஷ் டிரருக்கும் பெரும்பயன் அளித்து வந்தன. இச் செய்தித்தாள்கள் பலருடைய கொடுஞ்செயல்களை வெளிப்படுத்தி, அத்தகையவரை அடக்குவதற்குப் பயன்பட்டு வந்தன. ஆயினும், இதை யாவரும் ஏற்றுக்கொள்வார்களா? சிலருக்கு இவரை எவ் வகையிலேனும் அடக்க வேண்டும் என்னும் எண் ணம் இருந்தது.

7. பம்பாய் மாகாணத்தில், கோலாப்பூர் சம்ஸ் தானத்தைச் சார்ந்த தலைவர்கள் குடிகளுக்குத் தக்க வசதிகளைச் செய்யவில்லை. அச்சம்ஸ்தானத் தில் பல குறைகள் நிறைந்திருந்தன. அவை திலகரின் மனத்தை வருத்தின. அதனால், இவர் அவற்றைத் தம் பத்திரிகையில் வெளியிட்டு, அவர் களைக் கண்டித்தார். தம் குற்றங்களை ஒப்புக் கொள்ள யாரேனும் முன் வருவாரா? 'யதார்த்த

வாதி வெகுஜன விரோதி' அல்லவா? மதஸ்தா பனத்தையும், தம்மையும் இழித்துக் கூறியதற்காக அத்தலைவர் இவர்மீது வழக்குத் தொடுத்தனர். அவ்வழக்கினால் இவர் நான்கு மாதங்கள் சிறை வாசம் செய்ய நேர்ந்தது. பின்பு 'தட்சண வித்தியா சபா' என்னும் சங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட 'பெர்கூசன் காலேஜ்' என்னும் கல்லூரியில் கணித மும், சம்ஸ்கிருதமும் கற்பிக்கும் போதகாசிரியராய் அமர்ந்தார்.

8. திலகர் வேதத்தின் பழைமையைப்பற்றி 'ஓரியண்டு' என்னும் நூலை இயற்றி, 1892-ஆம் ஆண்டில் இலண்டனில் கூடிய கல்விச்சபைக்கு அனுப்பினார். அந்நூல் மாக்ஸ்முல்லர், விட்னே ஜாகோபி, அமெரிக்க நாட்டுச் சர்வகலாசாலை ஆசி ரியரான டாக்டர் புளும்பீல்டு முதலியவர்களால் பெரி தும் பாராட்டப்பட்டது. அதனால், திலகர் பெரும் புகழடைந்தார்.

9. நம் நாட்டில் ஒரு கால் பஞ்சமும், மற்றொரு கால் பிளேகு நோயும் வந்து மக்களைப் பெரிதும் வருத்தின. அவ்வமயங்களில் திலகர் தம் நாட்டுக்குச் செய்த உதவிகள் அளவிடற்பாலனவல்ல.

10. இவர் மக்களுக்கு நாட்டுப்பற்றை ஊட்டு தற்பொருட்டுச் சிவாஜியின் சமாதியைப் புதுப் பித்து, அவர் பிறந்த நாளைக் கொண்டாடி, அவரு டைய வீரச் செயல்களையும், தேசப்பற்றையும் விரித் துக் கூறினார்.

11. விக்டோரியா மகாராணியாரின் ஐம்பதாம் வருடக் கொண்டாட்டத்திற்குச் சென்று திரும்பி வந்துகொண்டிருந்த இரண்டு ஐரோப்பியர்களுள் ஒருவரைப் பம்பாய் மாகாணத்தினர் கொலைபுரிந் தனர். இதற்கு உண்மைக் காரணம் வேருயிருப் பினும், திலகர் சிவாஜியின் சரித்திரத்தைக் கூறி மக்களை ஊக்கப்படுத்தியதே இதற்குக் காரணம் எனப் பொய்க்குற்றம் சாட்டி, இவர் மீது வழக்குத் தொடுத்தனர். அதனுல், இவர் பதினெட்டு மாதக் கடுங்காவல் தண்டனையை அடைய நேர்ந்தது. அப் போதும் இவர் மனம் தளர்ந்திலது. ஆனுல், மாக்ஸ் முல்லர், வில்லியம் இவர்களது உதவியினுல் பத்து மாதங்களில் இவர் சிறையிலிருந்து வெளிப்போந் தனர்.

12. சின்னுட்கள் கழிந்த பின் திலகர் அரசியல் விஷயமாக ஆறு வருடம் மீண்டும் சிறை செல்ல நேர்ந்தது. அதற்கும் இவர் சோர்ந்தாரில்லை; தம் காலத்தை வீணுகவும் கழிக்கவில்லை; தம் தாய் மொழியாகிய மராத்தியில் ‘கீதா ரஹஸ்யம்’ என்னும் ஒரு நூலை இயற்றினுர். அது பலருக்கும் பயன்படு வதுமன்றி, அறிஞராலும் கொண்டாடப்படுகிறது.

13. இவர் அறுபதாம் ஆண்டை அடைந்த போது மக்கள் இவரிடம் கொண்ட அன்பிற்குஅறி குறியாக, இலட்ச ரூபாய் அடங்கிய ஒருபொருட் கிழியை இவருக்கு ஈந்து, இவரை வாழ்த்தினுர்கள். ஆனுல், பொருளில்விருப்பற்றஇவர், அப்பண முடிப் பைத் தேசத் தொண்டிற்கே அளித்துவிட்டனர்.

14. 1918-ஆம் ஆண்டு எங்கும் சுயராச்சியக் கிளர்ச்சி காட்சியளித்தது. மக்கள் அதில் மிக்க ஊக்கத்துடன் ஈடுபட்டு உழைத்து வந்தார்கள். அதன்பொருட்டுத் திலகர் பல முயற்சிகள் செய்து வந்தார்: ஆங்காங்குச் சென்று பல சொற்பொழிவுகளை ஆற்றினர்; மேனடுகளுக்குச் சென்றிருந்த போது, இங்கிலாந்திலும், ஸ்காட்லாந்திலும் இந்தியாவின் குறைகளை எடுத்துக் கூறினர். இவர் சென்னைக்குத் திரும்பியதும், காய்ச்சல் கண்டு 1920-ஆம் ஆண்டு தம் பூதவுடலை நீத்தனர். ஆவி பிரியுந் தருணத்திலும் இவர் வாய் கீதா வாக்கியங்களைப் பாராயணம் செய்துகொண்டேயிருந்தது. இவர் பிரிவு இந்தியாவுக்குப் பெருநஷ்டத்தை விளைத்தது. நாடு தாயை இழந்தது போன்று பொலிவிழந்தது. இவரது புலாலுடம்பு மறையினும், புகழுடம்பு இன்னும் நிலவுகிறது. இவர் மக்களுக்குப் புரிந்த நலங்களும், எழுதிய நூல்களின் கருத்துக்களும், தேசப்பற்றும் என்றும் மறக்கற்பாலன வல்ல. இத்தகைய தொண்டர்களின் ஆன்மாவும், தொண்டும் என்றும் வாழ்வனவாக!

அருஞ்சொற்பொருள்:

எய்துவதற்கு - அடைவதற்கு, உலக வாழ்க்கையை நீத்தனர் - மரணமடைந்தார், புகட்டும் - ஊட்டும், புரிதல் - செய்தல், விழைந்தது - விரும்பியது.

வினாக்கள்:

1. பால கங்காதர திலகருக்குக் கிடைத்த சிறப்புப் பெயர் யாது? அதன் பொருள் என்ன?

2. திலகரின் அறச்சிந்தையைப் புலப்படுத்த ஒரு சான்று கூறுக.

3. திலகருக்கு யார் யார் நட்பினராயினர்?

4. திலகர் ஏன் கோலாப்பூர் சம்ஸ்தான விஷயத்தில் தலையிட்டார்?

5. திலகர் செய்த நூல்கள் எவை? அவற்றின் சிறப்பு யாது?

6. இவர் பொருளாசை அற்றவர் என்பது எதனால் தெரிகிறது?

பயிற்சி:

1. திலகர் பொது மக்களுக்குச் செய்த உதவியையும், அதனால் இவர் அடைந்த துன்பங்களையும் சுருக்கி ஒரு கட்டுரை வரைக.

2. ஐந்தாம் பத்தியிலுள்ள அஃறிணை முடிபு வாக்கியங்களை உயர்திணை முடிபு வாக்கியங்களாக மாற்றுக.

## 2. கைத்தொழில்

1. உலகில் மக்கள் பற்பல காரியங்களைச் செய்து தங்கள் வாழ்க்கையைக் கடத்துகின்றார்கள். இக்காரியங்கள்யாவும் இரண்டு வகையில் அடங்கும்: ஒன்று, கல்வி சம்பந்தமானது; மற்றொன்று, தொழிற்சம்பந்தமானது. இரண்டும் ஒன்றோடொன்று மிக்க தொடர்புடையன. கல்வியின்றேல் தொழில் செவ்விய முறையில் நிகழாது. தொழில் இன்றேல், கல்வி விளக்கமுறாது. ஆயினும், இப்போது பலர் கல்வியினிடம் உயர்ந்த எண்ணத்தையும், கைத்தொழிலிடம் குறைந்த எண்ணத்

தையும் கொள்ளுகின்றனர். அன்னார் கைத் தொழிலே நாட்டின் செல்வத்தையும், நாகரிகத் தையும், பிற நாட்டுக் கூட்டுறவையும் தரவல்லது என்பதை அறிந்திலர் போலும்!

2. இதனாலன்றோ, நாம் வெண்ணெயை வைத் துக்கொண்டு நெய்க்கு மற்றவரை நாடிச்செல்லும் பேதையரைப்போன்று, நம் நாட்டு வாழ்க்கைக்கு வேண்டுவனவாகிய அரிய பொருள் யாவற்றையும் வைத்துக்கொண்டு, உணவிற்கும் உடைக்கும் பிற நாட்டை நோக்கி நிற்கின்றோம்? இக்கீழ்மை நம்மை விட்டு என்றுதான் அகலுமோ அறியோம்! இதற்குக் கைத்தொழிலைப் பெருக்கி வருவதே தக்க மருந்தாகும்.

3. எவர் கைத்தொழிலை மேற்கொண்டிருக் கின்றனரோ, அவரே மிக்க ஊதியம் பெறுகின் றனர். எந்நாடு கைத்தொழிலை முதன்மையாகப் பெற்றுள்ளதோ, அந்நாடே நாகரிகத்திலும், செல் வத்திலும் சிறப்புற்று விளங்குகிறது. அவ்வரசாங்க மும் கைத்தொழிலால் அதிக வருமானத்தைப் பெறுகிறது. விவசாயத்தைக்காட்டிலும் கைத் தொழிலில் மிகுந்த பொருள் கிடைக்கும் என்பது யாவரும் அறிந்ததே!

4. ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு ஜப்பான் எந்நிலையிலிருந்தது என்பது நமக்குத் தெரியும். அதற்கு வேண்டிய நூலும் உடையும், நம் நாட்டிலிருந்தே அனுப்பப்பட்டன. அது செல்வ

நிலையில் மிகக் குறைந்திருந்தது; கைத்தொழிலின் சீர்மையை அறியாமலே காலங்கடத்தியது. அத்தகைய தாழ்நிலையில் இருந்த ஜப்பானில் இப்போது இருக்கும் செல்வப்பெருக்கென்ன? தொழிற்சாலைகள் எத்தனை? மக்களின் பெருமிதம் எவ்வளவு? இப்போது நூலுக்கும், உடைக்கும் அவர்களுடைய உதவியையன்றோ நாம் ஒரு சிறிதளவு எதிர் நோக்கியிருக்கின்றோம்? தம் நாட்டில் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றிராத சிறு சிறு நாட்டினரும் புதிய பொருள்களை உண்டாக்கி, அவற்றைப் பல வகையில் பண்படுத்திப் பெரும் பொருள் திரட்டுகின்றனர். இயற்கையில் பல பொருள்களைப் பெற்றிருக்கும் நாமோ, அவற்றை நம் கைத்திறத்தினல் வகைப்படுத்திச் செல்வந் திரட்ட அறியாமல், வாளா கிடக்கின்றோம்!

5. நம் நாட்டு மக்களின் தொகை ஏறக்குறைய முப்பத்தைந்துகோடி. இவருள் வறுமையுள் வருந்துகின்றவர் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேருக்கு மேலாவர். பத்துப்பதினைந்து கோடி மக்களுள்ள நாடுகளெல்லாம் செல்வாக்குப் பெற்று விளங்க, இத்தனை மக்களைப் பெற்றுள்ள நம் நாடு உண்பதற்கும் சோறின்றி வருந்தக் காரணம் என்ன? கைத்தொழிலைப் போற்றுதலும் போற்றாமையுமே அல்லவா? எத்தேசம் கைத்தொழிலை உயிரெனக் கொண்டுள்ளதோ, அது சிறியதாயும், செழிப்பற்றதாயும் இருப்பினும், அறியாமலே, நாம் உயர்ந்தோங்குவது திண்ணம். இந்த இரக

சியத்தை அறியாமலே, நாம் பன்னாட்களையும், பல பொருள்களையும், சீரிய மதிப்பையும், உயர்ந்த வாழ்க்கையையும் இழந்து காலம் கடத்தினோம். இனியேனும் கைத்தொழிலின் மேன்மையை அறிந்து உயர முயல்வோமாக!

6. நம் நாட்டில் குயவர், தட்டார் முதலியவர் தத்தம் குலத்துக்குரிய மட்பாண்டங்கள் செய்தல், அணிகளை அமைத்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றனர். எனினும், அவர்கள் பெரும்பணக் காரர்கள் ஆவதில்லை. அதற்குக் காரணம், அவற்றை ஒழுங்கு பெறச்செய்வதற்குத் தக்க கல்வி இன்மையும், சோம்பலுமேயாகும்.

7. நம் நாட்டிற்கும், நம் வாழ்க்கைக்கும் இன்றியமையாத பொருள்களுட்பல, நம் நாட்டிலேயே கிடைக்கின்றன. ஆதலின், அவற்றை நாமே உண்டாக்கிக்கொள்ளுதல் நல்லது. நாம் உண்பன உடுப்பனவற்றையும் நம்மவரே செய்துகொள்வதற்கேற்ற வசதிகளைத் தேட வேண்டும். எந்தக்காரணத்தாலும் நாம் அயல் நாட்டுப் பொருள்களின் மீது ஆசை செலுத்துதல் கூடாது. இவற்றை விலைப்படுத்துவதற்கும் நம்மவரே முன் வரவேண்டும். இம்முறைகளை மேற்கொள்ளின், நம் நாட்டுப் பணம் நம் நாட்டிலேயே நின்று, நம்மனோரைச் செல்வத்தில் உயர்த்தும். பிற நாட்டுக்குச் சென்ற ஒரு காசும் நம்மிடத்திற்குத் திரும்பி வாராதென்பது உறுதி.

8. கைத்தொழிலில், பருத்தி ஆலை நடத்துதல், இருப்புப்பாதை அமைத்தல், கப்பல் கட்டுதல், நிலக் கரி எடுத்தல் முதலிய முதல்தரமான தொழில்களும், கண்ணாடி, காகிதம், சர்க்கரை முதலியன செய்தல், தோல் பதனிடுதல் முதலிய நடுத்தரமான தொழில் களும், நூல் நூற்றல், நெய்தல், தீக்குச்சி செய் தல், விவசாயக்கருவி செய்தல் முதலிய குடிசைத் தொழில்களும் உள்ளன. இவற்றுள் ஒவ்வோர் ஊரும், கிராமமும் தத்தமக்கு ஏற்றதொழிலை மேற் கொண்டு நடத்தலாம். இங்ஙனம் செய்தால், ஒவ் வொருவருக்கும் வேலை கிடைத்து, பசியாறக் காலங் கடத்தலாம்; வேலையில்லாத் திண்டாட்டமும், பட் டினியும் பறந்தோடிப்போகும். இத்தொழில்களால் வாணிகம் ஓங்கி நம் நாட்டில் பொருளாதார நிலை யும் உயரும்.

9. சில தொழில்களை முற்றும் கற்றுக் கொண்ட பின்பு, ஒருவருக்கும் அடிமைப்பட்டிரா மல் நாமே சுயமாகச் செய்து, உத்தியோகத்தால் அடையும் பொருள்களைக்காட்டிலும் பெருந்தொகை யைப் பெறலாம். வீட்டிலேயே செய்யும் தொழில் களும் பல உள்ளன. வெளியே செல்ல இயலாத பெண்களும்,வயதானவர்களும் இத்தகைய தொழில் களைச் செய்வதால், காலத்தை வீணாக்காமல் பயன் படுத்துவதோடல்லாமல் பொருளையும் பெறுவார்க ளல்லவா? அப்பொழுது வம்பளப்பிற்கும் வீண் சண்டை சச்சரவுகளுக்கும் இடம் ஏது?

10. நம் நாட்டில் எத்தனை பேர் தம்மை ஆத

ரிக்கும் பெற்றோரையும் உற்றோரையும், இழந்து உண விற்கும் வழியின்றித் தயங்குகின்றனர்! இவ் வறுமையினால் எத்தனை பேர் தம் நற்குணங்களை இழந்து இழிசொற்களை ஏற்கின்றனர்! இத்தகை யவருக்கு ஒரு சிறு தொழிலேனும் தெரிந்திருப் பின், அதைக்கொண்டு சிறப்பான முறையிலே காலங்கடத்தலாமல்லவா? கல்வியைப் போன்று கைத்தொழிலுக்கு இளமையும் மிக்க நுட்பமதியும் வேண்டும் என்பதில்லை. சாதாரண மக்களும் தங் களுக்கேற்றதைக் கற்று ஒருவாறு பிழைக்கலாம். 'ஒவ்வொருவரும் கைத்தொழிலைக் கற்றேயாக வேண்டும்,' எனக் கட்டாயப்படுத்தினாலொழிய நம் நாட்டுக் கைத்தொழில் முன்னேறுவதும் மக்கள் வறுமையிலிருந்து விடுபடுவதும் இயலா. நாட்டுச் செல்வத்திற்கும், உயர்விற்கும், நாகரிகத்திற்கும் தொழிற்கல்வியே முதன்மையானது என்பதைச் சிறியவர் பெரியவர் ஆகிய இரு சாராரும் உணர வேண்டும். கைத்தொழிலின் மேன்மையையறிந்து அதை முன்னேற்றுதற்கு முயலுவோமாக!

அருஞ்சொற்பொருள்:

ஊதியம் - இலாபம், வாளா - வீணாக, திண்ணம் - உறுதி.

வினாக்கள்:

1. மக்கள் கல்வியை விரும்புவது போன்று, கைத் தொழிலை விரும்பாமைக்குக் காரணம் என்ன?

2. நம் நாட்டில் தட்டார் முதலிய தொழிலாளர் பெரும்பொருள் திரட்ட இயலாமைக்குக் காரணம் என்ன?

3. நம்நாட்டுப் பொருளை நம்நாட்டிலேயே இருக்குமாறு செய்தற்கு வழி யாது?

4. கைத்தொழிலினால் என்னென்ன நன்மைகள் உண்டாகும்?

இலக்கணம்:

1. இப்பாடத்திலுள்ள தன்வினைகளைப் பிறவினைகளாகவும், பிறவினைகளைத் தன்வினைகளாகவும் மாற்றுக.

2. இப்பாடத்திலுள்ள செய்யுமென் வாய்பாட்டுச் சொற்களை எடுத்தெழுதுக.

பயிற்சி:

1. உணவு உடைகளுக்குப் பிற நாட்டை நோக்கியிருப்பதற்கு இப்பாடத்திற்கூறப்படாத ஓர் உதாரணத்தைக் கூறுக.

2. நான்காம் பத்தியின் திரண்ட பொருளென்ன?

3. கைத்தொழிலின் சிறப்பைப்பற்றி ஒரு பக்கத்தில் ஒரு கட்டுரை வரைக.

# 3. புலவரின் தோல்வி

1. விஜயநகர சாம்ராஜ்யத்தைக் கி. பி. 1509-20 வரை அரசு புரிந்த கிருஷ்ணதேவ ராயர், தென்னிந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆண்டார். அவரிடம் கல்வி, அறிவு, ஆராய்ச்சி, செங்கோன்மை முதலிய உயரிய பண்புகள் அமைந்திருந்தன. அவருடைய அவையைப் புலவர் சிலர் அணி செய்தனர். அவர்களுள் தென்னாலிராமன் என்னும் ஒரு விகட கவியும் இருந்தான். அரச அவையில் விகட கவிகளை வைத்திருத்தல் அக்கால வழக்கு.

2. விகட கவிகளும் கவிஞரைப்போன்றே கல்வியறிவிற்சிறந்தவர்களாயிருப்பார்கள். அவர்கள் பேச்சிலும் கவியிலும் அறவுரையும் அறிவுரையும் பொருந்தியிருக்கும். ஆயினும், அவர்கள் சொற்கள் பரிகாசமும் நகைச்சுவையும் நிரம்பியனவாய், சாதாரண நிலைக்கு மாறுபட்டனவாய் இருத்தலால், அவர்களுக்கு விகடகவிகள் எனப்பெயர் அமைந்தது. நீதி முறையினின்றும் பிறழ்ந்து நடக்கும் மன்னர்க்கு அவர்களுடைய மதிப்பிற்குக் குறை ஏற்படாவண்ணம் பரிகாச வார்த்தைகளால் உண்மையை எடுத்துக் கூறுதலும், ஆட்சித்



தொல்லைகளால் மனந்தளர்ந்திருக்கும் மன்னனுக்குச் சிறிதுகாலத்தை உல்லாசமாகக் கழிப்பதற்கு உதவி புரிதலும், செயலாலும் பேச்சாலும் தற்பெருமை பாராட்டி, எல்லாம் தெரிந்தவர் போன்று

நடிக்கும் போலிப் புலவரைத் தம் நா வன்மையால் அச்சுறுத்தித் தோற்கடித்தலும் விகட கவிகளின் செயலாகும்.

3. இத்தகைய விகடகவிகளுள் தலை சிறந்தவன் தென்னலிராமன். அவன் நுட்பமதியும், சமயோசிதச் செயலும், கவிபுனையும் ஆற்றலும் வாய்ந்தவன். விகடத்தன்மை அவனுக்கு இயற்கையிலேயே அமைந்திருந்தது. அவன் செய்த விகடங்களும், அவற்றால் அவன் பெற்ற வெற்றிகளும், அரசனுக்குண்டான நலங்களும் அளவிடற்பாலன அல்ல. அவ்விகடங்கள் எத்தனையோ முறை அவன் உயிரைத் தப்புவித்தன. அவற்றுள் ஒன்றை மட்டும் ஈண்டுக் கவனிப்போம்:

4. ஒரு போது ஒரிஸ்ஸா நகரத்திலிருந்து ஒரு சிறந்த புலவர் விஜயநகர அவைப்புலவர்களோடு வாதிக்க வந்திருப்பதாகத் தெரிவித்தார். அவர் வடமொழியில் வல்லவர்; வங்காளத்திலும், காசியிலும் பல போட்டிகளில் வெற்றி பெற்றவர். அவர் பெயரைக் கேட்டவுடன் விஜய நகர சம்ஸ்தானப் புலவர்கள் அச்சங்கொண்டார்கள். ஒருவரும் அவருடன் போட்டி போட முன் வந்திலர்.

5. புலவர்களின் அமைதி நிலை அரசருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. அவர், "புலவர்களே, நீங்கள் பேசாமலிருப்பதற்குக் காரணம் என்ன? அப்புலவருடைய ஆரவாரப் போக்கு உங்களை அச்சுறுத்திவிட்டதா? மதவெறி கொண்ட அப்புலவரை உங்களால் வெல்ல முடியாதென்று

நினைக்கிறீர்கள்? ஊக்கம் கொள்ளுங்கள்! உங்களிடம் அவர் பெறும் அவமதிப்பு இனி எந்தப் புலவரிடமும் வீண் வாதம் செய்யக்கூடாதென்னும் அறிவை அவருக்குப் பிறப்பித்தல் வேண்டும்," என்று சொல்லி அப்பண்டிதர்களை ஊக்கப்படுத்தினர்.

6. அரசருடைய சொற்கள் அவர்களுக்குச் சிறிதும் உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கவில்லை. அவர்கள் மன்னரை வணங்கி, "அறிவிற்சிறந்த அரசரே, அவர் பல கலைகளிலும் வல்லுனராய் உள்ளார்; அறிவின் ஆழத்தைக் கண்டு, காளியினிடம் வரம் பெற்றிருக்கிறார். அத்தகையவரை வெல்லுதல் கடினம். உங்கள் பெருமைக்கும் அது குறைவை உண்டாக்கும். ஆதலின், எங்களை மன்னித்தருள வேண்டும்'' என்று கூறினர்கள்.

7. புலவருடைய சொற்கள் கிருஷ்ணதேவ ராயருக்கு வியப்பையும் சினத்தையும் உண்டாக்கின. இவர்கள் புலமை இவ்வளவுதானு! இவர்களைப் பெரும்புலவர்கள் என நினைத்திருந்தது நம் அறியாமையேயாகும். அவைக்கு அஞ்சும்புலமை என்ன பயனுடையது! அவ்வெளியூர்ப் புலவருக்கு நாம் தோற்றுப்போனேம் என ஒப்புக்கொள்ள வேண்டுவதுதான்!'' என நம்பிக்கையற்று மனச் சோர்வுடன் அரியாசனத்தில் அமர்ந்திருந்தார்.

8. அதுகாறும் பொறுமையுடன் ஒன்றும் பேசாதிருந்த தென்னலிராமன் எழுந்து மன்னரை வணங்கி, "வீரத்தில் சிறந்து விளங்கும் மன்னரே,

யான் ஒருவன் உங்கள் அவையில் இருக்கும்போது நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? யான் பாண்டுரங்க மகாத்மியமும், லிங்கபுராணமும் இயற்றியிருப்பதை அறியீரா? அவருக்குப் புத்தக அறிவு பெரிதாயிருக்கலாம்; பொது அறிவோ, மிகவும் சூனியமாய் இருக்கும். அவரை யான் வெல்வேன்! மற்றப் புலவரைத் துணை செய்யுமாறு உதவி செய்யுங்கள். நாளைக்கே அவரை இந்நாட்டிலிருந்து ஓட்டிவிடுகிறேன்! நீங்கள் சிறிதும் அஞ்சற்க!'' என மிக்க வீரத்துடன் மொழிந்தான்.

9. ஆயினும், அரசருக்குத் தென்னலிராமனிடம் நம்பிக்கை ஏற்படவில்லை. வேறு வழியில்லாமையின், அவர் அதற்கு உடன்பட்டு, மற்றவர்களை அவனுக்கு உதவி செய்யுமாறு பணித்தார்.

10. மறுநாள் தென்னலிராமன் ஓர் அழகிய பட்டுத்துணியால் சுற்றப்பட்ட ஒரு கட்டைக் கையிலேந்திக்கொண்டு, அறிவு சம்பந்தமான வாதம் நடைபெறும் மண்டபத்தை அடைந்தான். அங்கு அரசவைப் புலவரும் வந்து கூடினர். முன்னேற்பாட்டின்படி ஒரிஸ்ஸாவிலிருந்து வந்த பண்டிதரும் சபையை அடைந்தார். அவர் தென்னலிராமனை நோக்கி, "உம்கையிலிருப்பது என்ன?'' என வினவினர். தென்னலிராமன், "இது திலகாஷ்ட மகிஷ பந்தனம். இதைச் சமீபத்திலேதான் செய்து முடித்தேன்; நாளைய தினம் இதைப்பற்றி நாம் வாதம் தொடங்கலாம்,'' எனக் கம்பீரமாக விடையளித்தான்.

11. அயல் நாட்டுப் பண்டிதர் மனத்தில் கவலை அலை வீசத்தலைப்பட்டது. தென்னுலிராமன் சொல்லிய வீர வார்த்தைகள் அவர் செவியில்ஒலித்துக்கொண்டிருந்தன. அதனுல், அவர், 'இவன் பெரிய பேர்வழி போலும்! ஆஸ்தானப்புலவர் யாவரும் இவனிடம் பத்தி காட்டுகின்றனர். அன்றியும், இவன் சொல்லும் திலகாஷ்ட மகிஷபந்தனத்தைப்பற்றி இதுகாறும் நாம் கேள்விபட்டதேயில்லை! அதில் என்ன உயர்ந்த பொருள்கள் அடங்கியிருக்கின்றனவோ! நாம் கல்லாததும், அறியாததுமானதைப் பற்றி வாதம் தொடங்கினுல், எப்படி வெற்றியடைய முடியும்? எங்கும் என்றும் தோல்வியுருத நமக்கு இவனிடத்தில் இந்நாட்டில் தோல்வி ஏற்படின், நாம் இதுவரையும் திரட்டிய பேரும்பெருமையும் நீங்கும். நம்கீர்த்திகெடும். இக்காரியத்தைமேற்கொள்ளுதல் கூடாது,' என்று எண்ணி, அன்றிரவே ஒருவருமறியாதபடி அந்நாட்டை விட்டுச் சென்றுவிட்டார்.

12. பொழுது புலர்ந்ததும் ஒரிஸ்ஸா நாட்டுப் பண்டிதர் ஓட்டம் பிடித்தார் என்னும் செய்தி ஊரெங்கும் பரவியது. யாவரும் மகிழ்ந்தனர். அரசர் தென்னுலிராமனது சாதுரியத்தையறிந்து ஆச்சரியமுற்ருர். பண்டிதர் பயந்து ஓடுவதற்குக் காரணமாயிருந்த திலகாஷ்ட மகிஷ பந்தனத்தைப்பற்றி அறிய விழைந்து, தென்னுலிராமனை அழைத்து விசாரித்தார்.

13. தென்னுலிராமன் அவரை நோக்கி "மன்னரே, யான் கூறுவதைச் சற்றுப் பொறுமை

யுடன் கேட்பீராக! திலகாஷ்டம் - எள்ளுக்குச்சி; மகிஷபந்தனம் - எருமை கட்டும் கயிறு. இவைகளே யான் சொல்லியதன் பொருள். இவ்விரு பொருள் களே யான் கொண்டு வந்தவை. இதன் பொருள் அப்பெரும்பண்டிதர்க்கே தெரியவில்லையென்றால், உங்களுக்குத் தெரிவது கடினமன்றோ? அவருடைய ஏட்டுக்கல்வி என் முன் பயன் படாமற்போயிற்று. என் வார்த்தையில் பொய்யுமில்லை; புனைந்துரையு மில்லை. அது கூரிய அறிவில்லாத ஆரவாரப் பண்டிதரை நடுங்கி ஓடச்செய்யப் பயனளித்தது. அவரவர்கட்குத் தக்கதைச் செய்து பின்னிடச் செய்வதுதானே வெற்றி எனப்படுவது?" எனப் பகர்ந்தான்.

14. அரசரும் அவைப்புலவரும் மற்றவரும் தென்னலிராமனது சூக்கும அறிவிற்கு வியந்து கொண்டாடியதுமன்றி, அரசர் அவனுக்குப் பொற்கிழியைப் பரிசாக அளித்தார். சின்னாட் கள் வரை தென்னலிராமன் செயல் நாடு முழுவதை யும் நகைச் சுவையிலேயே ஆழ்த்திற்று. தென்னலி ராமனது நுட்பமதியைப் பாராட்டாதவர் எவரும் இலர்.

அருஞ்சொற்பொருள் :

அறவுரை - நீதி நிரம்பிய சொற்கள், அறிவுரை - அறிவைப் புகட்டும் சொற்கள், ஆரவாரம் - ஆடம்பரம், வாளா - ஒன்றும் செய்யாமல், புலருதல் - விடிதல், புரளி - பொய், புனைந்துரை - கற்பனை.

### வினுக்கள் :

1. கிருஷ்ணதேவ ராயர் எத்தகையவர்?

2. விகட கவிகளின் செயல்கள் யாவை?

3. தென்னுலிராமன் யார்? அவன் எத்தகையவன்?

4. அரசர் தம் புலவர்களை எவ்வாறு ஊக்கப்படுத்தினர்?

5. விஜயநகரப் புலவர்கள் புதிய பண்டிதருக்கு அஞ்சியதேன்?

6. தென்னுலிராமன் அரசருக்குக்கூறிய மொழிகள் யாவை?

7. புதிய பண்டிதர் ஏன் சொல்லாமல் ஓடி ஒளிந்தார்?

8. 'திலகாஷ்ட மகிஷ பந்தனம்' என்பதன் பொருள் என்ன?

### இலக்கணம் :

1. செயப்படுபொருள் குன்றிய வினைகள் நான்கு கூறுக.

2. புலவர், மன்னன், தோற்றுன், இருக்கை, பரவியது, நகைப்பு - இவற்றிற்குப் பகுபத இலக்கணம்கூறுக.

3. இப்பாடத்திலுள்ள வியங்கோள் வினை முற்றுக்களை எடுத்தெழுதுக.

### பயிற்சி :

1. விஜயநகர ஆஸ்தான பண்டிதர்களின் இயல்பை ஐந்து வரிகளில் எழுதுக.

2. தென்னுலிராமனது நுட்பமதியைக் குறித்து இருபது வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

3. இப்பாடத்திலுள்ள வாக்கியங்கள் நான்கைக் கேள்வி வாக்கியங்களாக்குக.

# 4. எல்லோராவில் உள்ள குகைக்கோவில்கள்

1. நம் பாரதநாடு பண்டு பல கலைகளிலும் சிறந்து விளங்கியதென்பது யாவரும் அறிந்ததே. கலைகளுள் சிற்பக்கலை மிகச் சிறந்ததாகும். தஞ்சைக் கோவிலின் கோபுரச் சீர்மையையும், கடல் மல்லைச் சிற்பத்தின் திறனையும் முறையே முதல் இரண்டாம் புத்தகங்களில் கூறியுள்ளோம். இப்புத்தகத்தில் எல்லோராக்குகைக் கோவில்களைப் பற்றிச் சிறிது கூறலாம்.

2. எல்லோரா என்னும் கிராமம், ஔரங் காபாதிற்குப் பதினறு மைல் தூரத்தில் உள்ளது. அங்கு அழகிய கோபுரத்தோடு கூடிய ஒரு சிவன் கோவில் இருக்கிறது. அதைப் பதினெட்டாம் நூற்றாண்டில் அரசு புரிந்த அகல்யாபாய் என்னும் மாதரசியார் கட்டுவித்தனராம். அக்கோவில் களின் சிற்பங்கள் மிக்க சீர்மையுடையனவாயிருத் தல் மட்டுமேயல்லாமல், சிவப்புச் சந்தனக்கற் களால் அமைக்கப்பட்ட லிங்கம் ஒன்றும் அங்குள் ளது. அதைக் கிருஷ்ணலிங்கம் என்கின்றனர். அதற் குக் கரிய லிங்கம் என்றும், கிருஷ்ணனல் பூசிக் கப்பட்ட லிங்கம் என்றும் பொருள் கூறுகின்றனர்.

3. ஒரு கால் புத்தசமண சமயங்கள் இந்து சமயத்தை நெருக்கின. இரண்டாவது நூற்றாண் டிற்குப் பின்போ, இந்து மன்னர் பௌத்த சமணத் துறவிகளைத் துன்புறுத்தத் தொடங்கினர். ஆத

வின், அவர்களுள் பலர் எல்லோராக் குகைகளையும், அஜந்தாக் குகைகளையும் அடைந்து, அங்கு மறைந்து வாழ நேர்ந்தது. அவர்களுள் சிலர் சிற்பத்தில் வல்லுனராயிருந்தமையின், அவர்கள் குன்றைக் குடைந்து, தங்களுடைய கோவில்களையும்,



எல்லோராக் குகைகள்

பள்ளிகளையும் அதில் அமைத்தார்கள். இங்ஙனம் உண்டாக்கிய செயற்கைக் குகைகளேயல்லாமல், இயற்கைக்குகைகள் சிலவும் அங்கு இருக்கின்றன. சில சமணத்துறவிகள் அவற்றைப் பெரியனவாகச் செய்து, தங்களுக்கு வேண்டிய வசதிகளை அவைகளில் அமைத்துக்கொண்டார்கள்.

4. எல்லோராவுக்கு அரைமைல் தூரத்தில் முப்பத்து நான்கு குகைகள் இருக்கின்றன. அவற்

றுள் பல சிற்பங்கள் அமைந்திருக்கின்றன. அவை ஒரு சமயத்தினரை மட்டும் சார்ந்தனவல்ல; இந்து மதம், பௌத்தம், சமணம் ஆகிய மூன்று சமயங்களையும் குறிப்பனவாகும். சில இடங்களில் ஒரு குகையிலேயே மூன்று விதச் சிற்பங்கள் அமைந்திருக்கின்றன. அவைகள் அக்காலத்தில் மக்கள் சமய வேறுபாடின்றி வாழ்ந்தார்கள் என்பதை அறிவிக்கும் அறிகுறிகளாகும். இம் முப்பத்து நான்கு குகைகளும் மலையில் ஒரு புறச் சரிவில் ஒன்றரைமைல் வரையில் அமைந்துள்ளன. அங்குள்ள கல்வெட்டுக்கள் அக்குகைகள் மூன்றும் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டிற்குள் ஏற்பட்டனவென்பதைத் தெரிவிக்கின்றன.

5. ஒவ்வொரு குகையும் இடம் அகன்றதா யிருப்பது மட்டுமன்றி, ஒளி பொருந்திய மண்டபங் களும், கோவில்களும் உடையதாயுமிருக்கின்றது. இந்து சமயக்குகைகளில் ஒன்றன் பெயர் 'கைலா சம்' என்பது. அஃது இருநூற்றெண்பது அடி நீளமும், நூற்றறுபது அடி அகலமும், நூற்றைம்பது அடி உயரமும் உள்ளதாய் அமைந்துளது. கி. பி எட்டாம் நூற்றாண்டில் இருந்த இராட்டிர வமிசத் தைச்சார்ந்த முதலாம் கிருஷ்ணன் என்பவன், கி. பி 757-ஆம் ஆண்டில் சாளுக்கியரைத் தோல்வியுறச் செய்து வெற்றிபெற்றான் என்றும், அவ்வெற்றியின் அறிகுறியாகவே அக்குகைக் கோவில் அமைக்கப் பட்டதென்றும், அதைக்கட்டி முடிக்கப் பல்லாண்டு கள் ஆயினவென்றும், மன்னன் அக்கோவிலைக்

கட்டி முடிக்குமுன்பே இறந்துவிட்டானென்றும், ஆயினும், அது கட்டி முடித்தற்கு வேண்டிய பொருளை ஒதுக்கி வைத்திருந்தான் என்றும் கூறுகின்றனர்.

6. அதன் அடிப்பாகத்திலுள்ள கூடத்தில் இதிகாச புராணங்களின் கதைகளை விளக்கும் சித்திரங்கள் பல அழகு பெறச் செதுக்கப்பட்டிருக்கின்றன. அங்குச் சிலபெண் பூதங்களின் சிலைகள் காணப்படுகின்றன. அவற்றைப் பிரபஞ்சமாதர்கள் என்கின்றனர்.

7. கைலாசத்துக்குச் சுவர்க்கமாளிகை என்ஞெரு பெயரும் உண்டு. அக்கோவிலிலுள்ள சிவபெருமானுக்கு அழகன் என்பது பெயராகும். அக்கோவில் பதினுறுவதாய் அமைந்து, மற்றக்கோவில்களுக்கு நடு நாயகமாய் விளங்குகிறது. அதைக் கட்டி முடித்துப் பதினொரு நூற்றுண்டாகியும், அது மழை, காற்று, சூரிய ஒளி முதலியவற்ருலும், பகைவராலும் அழிவுருமல் இருத்தலே பெருவியப்பாகும். அதனுள்ளிருக்கும் சிற்பப் பொலிவினைக் காண ஒரு நாள் முழுவதும் போதாது. அவை, சிற்பிகளுக்கு இருந்தபத்தியையும், ஆர்வத்தையும் எடுத்துக்காட்டுகின்றன. அக்கோவிலின் மத்தியில் கைலாசநாதர் திருவுருவம் கொண்ட ஒரு மண்டபம் இருக்கிறது. அதன் விமானம் தொண்ணூற்ருறு அடி உயரமுடையது.

8. இரண்டாவது குகையில் சிற்பி ஒரு புத்த விக்கிரகம் சிங்காசனத்தில் அமர்ந்திருப்பது

போன்று அமைத்திருப்பது மிக்க வனப்புடன் ஒளிர்கின்றது.

9. பௌத்தர் குகைகளுட்சிறந்து விளங்கும் ஐந்தாவது குகையில் பௌத்தபிக்ஷுக்கள் தங்கியிருக்க இருபது அறைகள் இருக்கின்றன. அவர்கள் படுத்து இளைப்பாறும்பொருட்டு, அகலமான கட்டில்கள் கல்லில் வெட்டி அமைக்கப்பட்டிருக்கின்றன. அங்கும் புத்தர் சிலை ஒன்றுள்ளது. புத்தர் தம் சீடர்களுக்கு உபதேசம் செய்யும் சிற்பமும், புத்தர் மோட்சத்திற்குப் போகும் சிற்பமும் காணப்படுகின்றன.

10. பன்னிரண்டாவது குகையை மூன்று அடுக்கு என்று கூறுகின்றனர். அங்குத் திறந்த வெளியிடத்தில் ஒரு திண்ணையும், தூண்களோடு அமைந்த கூடமும் உண்டு. அதன் பின் கோடியில் சிற்ப வேலைப்பாடமைந்த மூலத்தானம் ஒன்றுண்டு. அதில் அரியணையில் அமர்ந்திருக்கும் புத்தர் பெருமான் உருவமும் இரு பக்கங்களிலும் இரண்டு மான்களும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

11. சில குகைகளில் வெளிச்சம் நுழையும் பொருட்டுச் சாளரங்கள் வைக்கப்பட்டுள்ளன. மரத்தில் செய்யக்கூடிய நுட்ப வேலைகளைக் கல் தச்சர்கள் கல்லில் செதுக்கியிருப்பது மிக்க வியப்பிற்கு இடமானதாகும்.

12. இங்ஙனம் எல்லோராவில் அமைந்திருக்கும் சிற்பங்கள் நம் நாட்டினருக்கும் மேல் நாட்

டினருக்கும் கண்ணுக்குப் பெருவிருந்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஆனல், அங்கு முன்பிருந்த மாண்பமைந்த நகரம், இப்போது இருந்த இடம் தெரியாது மறைந்து போயிற்று. இப்போது நாம் காணக் கிடப்பது, எல்லோரா என்னும் சிறு கிராமமேயாகும். நம் நாட்டுக்குச் சிற்பக்கலையின் திறனை வெளிப்படுத்துவதற்கு இஃதோர் அறிகுறி என்பது மிகையாகாது.

அருஞ்சொற்பொருள் :

பள்ளி - கோவில், பொலிந்து - விளங்கி, நடுநாயகம் - நடுவில், எல்லாவற்றிற்கும் சிறந்ததாயிருப்பது, ஆர்வம் - ஆசை, பிக்ஷு - பௌத்த சன்னியாசி, மூலத்தானம் - கடவுள் உருவம் இருக்கும் கருப்பக்கிருகம்.

வினுக்கள் :

1. எல்லோராவில் பல குகைக்கோவில்கள் அமைந்ததற்குக் காரணம் என்ன ?

2. 'கிருஷ்ணன்' என்னும் இராட்டிர வமிச அரசனைப்பற்றி உனக்கென்ன தெரியும்?

3. 'கைலாசம்' என்னும் குகைக் கோவிலின் சிறப்பு யாது ?

4. ஐந்தாவது, பன்னிரண்டாவது குகைக்கோவில்களில் என்னென்ன இருக்கின்றன ?

பயிற்சி :

1. மனம், மணம் ; பொறித்தல், பொரித்தல்; பள்ளி, பல்லி ; பொருத்து, பொறுத்து ; புறம், புரம் - இவற்றை வாக்கியங்களில் அமைக்க.

2. இப்பாடத்தில் உன் மனத்தைக் கவரும் சிறந்த பொருள்களைப்பற்றி ஒரு பக்கத்தில் ஒரு கட்டுரை எழுதுக.

## 5. பேராசையின் பயன்

1. அமராவதி என்னும் ஒரு நகரத்தின்கண் அந்தணர் நால்வர் வாழ்ந்து வந்தனர். அந்நால்வரும் இணை பிரியா நட்பினராய்த் தம் காலத்தை இனிதே கடத்தி வந்தனர். அவர்களுக்குத் தம் சொந்தவூரில் தகுந்த தொழிலும் போதுமான வருவாயும் கிடைக்கவில்லை. அதனால், 'நல்ல காலம் வரும் வரும்,' என்று பன்னாட்கள் எதிர்பார்த்திருந்தனர். ஆனால், நன்மை கிடைக்கவில்லை. பொருள் தேடுவதற்குப் பல வழிகளில் முயன்று பார்த்தும், உணவிற்கே வருவாய் கிட்டவில்லை. நாளுக்கு நாள் வறுமை அவர்களை வாட்டத் தொடங்கிற்று. ஆதலால், ஒரு நாள் நால்வரும் ஒன்று சேர்ந்து, 'இனி நம்மால் இவ்வறுமையைத் தாங்க முடியாது; திரை கடலோடியும் திரவியம் தேடு,' என ஔவையார் சொல்லியபடி நாம் வெளித் தேசங்களுக்குச் சென்று பொருள் தேடிப் புகழடைவோம்!" எனத் தீர்மானித்து, மறுநாளே அவ்வூரை விட்டுப் புறப்பட்டனர்.

2. அங்ஙனம் செல்லும் வழியில் க்ஷிப்பிரா நதிக் கரைக்கு அருகில் பைரவானந்தி என்னும் யோகியார் ஒருவர் எல்லாவற்றிலும் வல்லுனராய், யார் எதை விரும்புகின்றனரோ, அதை அவர்க்குக் கொடுத்து

வருகிறார் எனச் சிலர் பேசிக்கொண்டதை அவர்கள் கேட்டார்கள். தங்களது வறுமையை அவரிடம் கூறிப் போக்கிக்கொள்ள விரும்பி, அந்நால்வரும் விரைந்து சென்று அந்த யோகியாரை முறைப்படி பூசித்து நின்றார்கள்.

3. அவர்களுடைய உண்மை வழிபாட்டிற்கு இரங்கிய யோகியார், 'அந்தணர்களே, நீங்கள் இங்கு வந்ததற்குக் காரணம் யாது?' என



வினவினர். அந்நால்வரும் அவரைப் பணிந்து, "முனி சிரேஷ்டரே, நல்குரவு எங்களைப் பெரிதும் நலிக்கின்றது; அதைத் தொலைக்கப் பொருளைத் தேடுதற்பொருட்டு எங்கள் நாடு துறந்து வந்தோம்; வரும்வழியில் உமது பெருமையைக் கேட்டு உம்மைச் சரணடைந்தோம். நீவிர் அருள் கூர்ந்து, எங்கள்

மிடியைப் போக்கும் நெறியைக் காட்டியருள் வேண்டும்; இன்றேல், எங்கள் உயிரை உம்பால் விடுக்குதும்,'' என உறுதி மொழி தெரிவித்தனர். அவர்களுடைய கடைப்பிடியையும் தீரத்தையும் நோக்கிய யோகியார் பின் வருமாறு கூறினர்:

4. "இளைஞரே, மந்திரங்களினால் உருவேற்றப்பட்ட இவ்வர்த்திகளை உங்கள் தலைமேல் வைக்கின்றேன். நீங்கள் இவற்றுடன் இமயகிரிக்குப் போங்கள்; அவ்வாறு போகும்போது யாருடைய வர்த்தி எங்கு விழுகின்றதோ, அங்கு அவர் நினைத்தது சித்தியாகும்,'' எனச்சொல்லி, நான்கு பேர் தலைகளின்மீதும் ஒவ்வொரு திரிச்சிலையை வைத்தனுப்பினர்.

5. பொருள் பெறுவதிலேயே நாட்டமுடைய அவர்கள் அவ்யோகியாரின் ஆணையைச் சிரமேற்றாங்கி, இமயத்தை நோக்கி நடந்தார்கள். சிறிது தூரம் சென்றதும் ஒருவனது திரிச்சிலை கீழே விழுந்தது. அங்குக் கல்லிப்பார்க்க, அது தாமிரக் கனியாயிருந்தது. அவன் மற்ற மூவரையும் நோக்கி, "நண்பரே, நும் வறுமையொழிய வேண்டுமட்டும் தாமிரத்தை எடுத்துக்கொள்ளுங்கள்,'' என்றான். அதைச் செவியேற்ற மற்ற மூவரும், "பேதாய், இதனாலென்ன பயன்? இதை நாம் எவ்வளவு கொண்டுபோயினும், நம் வறுமை நீங்கிச் செல்வந்தர் ஆக முடியாது. ஆதலால், நாங்கள் இன்னும் முன்னுக்குச் சென்று பார்ப்போம்!'' என இயம்பிக்கொண்டே முன் சென்றனர்.

அவனே, தன் ஆற்றலுக்கு ஏற்ப அத்தாமிரத்தை வாரிக்கொண்டு வந்த வழியே திரும்பினன்.

6. மற்ற மூவரும் சிறிது தூரம் சென்றதும் இன்னொருவன் தலையிலிருந்த திரிச்சீலை விழுந்தது. அவன் அந்த இடத்தைத் தோண்டிப்பார்க்க அங்கு வெள்ளி நிறைந்திருந்தது. மற்ற இருவரும் அவ்வெள்ளியையும் கொண்டுபோக மனமில்லாதவராய், "இன்னும் சிறிது தொலைவு செல்லின்; பொற்குவியல் கிடைக்கும்,' என அவனை விட்டு விட்டு வழி நடந்தனர். அவன் தன்னால் சுமக்கக் கூடிய வெள்ளியை எடுத்துக்கொண்டு திரும்பினன்.

7. இருவரும் அப்பால் நடக்கையில் இன்னொருவன் சிரத்திலிருந்த திரி நிலத்தில் வீழ்ந்தது. அவன் அங்குத் தோண்டிப்பார்த்து, பொற்குவியலைக் கண்டான். அவனுக்குண்டான களிப்பிற்கு அளவேயில்லை. "நாம் கருதியது கை கூடிற்று! வறுமைப்பிணி இனி நம்மை என்றுஞ் சாராது! நாம் வழி நடக்கும் துன்பத்தைச் சிறிதும் நோக்காமல், வந்ததற்குத் தக்க பயனை அடைந்தோம்! நண்பனே, இனியும் மேல் போகவேண்டுமென்னும் எண்ணத்தைக்கொள்ளாதே! அப்படிச் செய்தால், அது பேராசையின்பாற்படும்; ஆதலால், நம்மாலானவரை இதையே எடுத்துச் சென்று செல்வராகலாம். துணையின்றித் தனித்துச் செல்வதும் தக்கதன்று,'' எனக் கூறினன். ஆனல், நான்காமவனுக்கிருந்த பேராசை அவன் அதற்கு இணங்க இடந்தரவில்லை. ஆதலின், அவன்

மற்றவனை நோக்கி, "நீ முன் இருவரைப் போன்றே அறிவற்றவன்; சிறிது தொலைவில் நடக்க நடக்க ஒன்றைக்காட்டிலும் ஒன்று விலையுயர்ந்ததாகக் கிடைத்துக்கொண்டிருக்கிறதல்லவா? இன்னும் முன்னே சென்றால், மணிக்குவியல் காணப்படலாம். ஆதலின், யான் முன் நோக்கிச் செல்வேன்," என விரைந்து நடந்தான்.

8. மூன்றாமவன், "யான் இச்செம்பொன்னை வைத்துக்கொண்டு, உன் வரவிற்கு நோக்கிக் கொண்டிருக்கிறேன். நீ விரைந்து வருக," என்று இயம்பி, அவ்விடத்திலேயே இருந்தான்.

9. பேராசையில் மூழ்கிய அப்பேதை, அவ னிருந்து செல்லுங்கால், எவ்வாறோ தான் செல்ல வேண்டிய நெறியை விட்டு வேறு வழியில் நுழைந்து விட்டான். பசியும் நீர் வேட்கையும் அவனை வருத் தின. திரும்பிச் செல்லவும், வந்த வழி அவனுக்குத் தெரிந்திலது. இங்கும் அங்கும் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந்தான். அவண், ஒரு மனிதன் தலையில் ஒரு சக்கரம் சுழன்றுகொண்டிருந்தது. அவன் உடலெல்லாம் செந்நீர் நிரம்பியிருந்தது. அக்காட்சி வந்தவனுக்கு வியப்பையும் அச்சத்தை யும் உண்டாக்கியது. அவன் அச்சக்கரத் தலையனை நோக்கி, "நீ யாவன்? இச்சக்கரம் உன் தலைமேல் சுழல்வதற்குக் காரணம் என்ன?" என்று உசாவினன். அச்சக்கரம் வழிப்போக்கன் தலையில் வந்து அமர்ந்தது. அவ்வேதியன் துணுக்குற்று, "ஈதென்ன! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது

போலாயிற்றே!" என மிக்க கவலையுற்று, "இச்சக்கரம் என் தலைமேல் வந்துற்றதற்குக் காரணம் யாது?" எனக் கேட்கலுற்றான்.

10. மற்றவன், "ஐயா, இது குபேரனுக்குரிய இடம். ஒரு காலத்தில் பேராசையினால் யான் இக்கதிக்குட்பட்டேன். 'இத்துன்பத்திலிருந்து எனக்கு விடுதலை எப்போது?' என்று வினவக் குபேரன், 'தலைத்திரியோடு ஒருவன் இங்கு வந்து, 'இச்சக்கரம் சுழல்வதற்குக் காரணம் யாது?' எனக் கேட்பான். அப்போதுதான் இஃது உன் தலையை விட்டு அவனைப் பற்றிக்கொள்ளும்,' என்றான். இப்பொழுது அப்படியே நிகழ்ந்தது," என்றான்.

11. புதியவன், "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததுபோலாயிற்று என் கதி!" எனத் தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, "நீ இங்கு வந்து எத்தனை நாட்களாயின?" என்றான்.

12. பழையவன், "ஐயா, ஸ்ரீராமபிரான் அரசியற்றுங்காலை, யான் இச்சக்கரத்தால் பிடிபட்டேன்," என்றான்.

13. புதியவன், "இங்கு உண்பதற்கு உணவும், குடிப்பதற்கு நீரும் கொடுப்பவரார்?" என்றான்.

14. பழையவன், "இங்குள்ளவரைப் பசியும், நீர் வேட்கையும் வருத்துதல் இல்லை; குபேரன் நிதியைக் கவர எண்ணி வருபவரை அச்சுறுத்தவே இச்சக்கரம் இங்கு வைக்கப்பட்டுள்ளது. ஆதலின், இங்கு யாரும் வருவதில்லை," எனச் சொல்லிக்கொண்டே வழி நடந்தான்.

15. முன் பொற்குவியலிடம் இருந்தவன் நெடு நேரம் பார்த்து, அவனைத் தேடிக்கொண்டு வந்து, அவன் நிலையைக்கண்டு அச்சுற்று, "ஈதென்ன அதிசயம்?" என வினவினான். சக்கிரி அவனைப் பார்த்து, "நண்பனே, இது பேராசையின் பயன்," எனக் கூறி வருந்தினான். வந்தவன், பிறர் அறிவுரைகளைக் கேளாது துன்புற்றவர் சிலர் வரலாறுகளை அவனுக்குச் சொல்லி, அவனை மீட்க வழியில்லாமையின், தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.

அருஞ்சொற்பொருள் :

வாட்ட - துன்புறுத்த, திரை - அலை, சிரேஷ்டர் - முதன்மையுற்றவர், நல்குரவு - வறுமை, நலிகின்றது - வருத்துகின்றது, சரண் - அடைக்கலம், நெறி - வழி, ஆணை - கட்டளை, பேதை - அறிவற்றவன், செந்நீர் - உதிரம்.

கேள்விகள் :

1. நண்பர் நால்வரும் ஊரை விட்டுப் புறப்பட்டதற்குக் காரணம் என்ன?

2. அவர்கள் யோகியாரைச் சரணடைந்து கூறியன யாவை?

3. யோகியார் அவர்கள் பொருள் பெறுதற்குச் செய்த உதவி யாது?

4. தாமிரக்கனியைப் பற்றி மற்ற மூவரின் கருத்தென்ன?

5. நான்காம் மனிதனுக்குக் கிடைதத பரிசு யாது?

6. மற்ற மூன்று பேருக்கும், நான்காமவனுக்கும் உள்ள வேறுபாடு என்ன?

பயிற்சி :

1. இக்கதையிலுள்ள பழமொழிகளை எடுத்தெழுதி, அவற்றின் பொருளை விளக்குக.

2. ஆருவது பத்தியிலுள்ள வினையெச்சங்களைக் கூறுக.

3. இப்பாடத்தில் நான்கு வியங்கோள் வினை முற்றுக்களைக் குறிப்பிடுக.

4. 'பேராசை பெருநஷ்டத்தை உண்டாக்கும்,' என்பதற்கு வேறு ஏதேனும் ஒரு கதை சொல்லுக.

## 6. கலிங்கப் போர்

1. தமிழ் நாடு பண்டைக் காலத்திலேயே சீர்மை பெற்றிருந்தது. தன்னலங்கருதாத நற் பண்புகளும், ஈகை முதலிய இன்னலங்களும், வீர மாகிய ஆண்மைத்திறமும் இங்கு அமைந்திருந்தன. இந்நாடு சேர சோழ பாண்டி நாடுகளையுடைய தாய், சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தரால் ஆளப்பட்டு வந்தது.

2. 'சோழநன்னடு சோறுடைத்து,' என்று பெரியார் சிறப்பித்துக் கூறிய சோழநாட்டை முதற் குலோத்துங்கன் என்பான் சில காலம் ஆண்டு வந்தான். இவன் காலம் பதினேராம் நூற்றூண்டு. இவன் சாளுக்கிய ராஜராஜனுக்கும், அம்மங்கா தேவிக் கும் புதல்வனுய்த் தோன்றினன். இவன் தன் பதினுரும் வயதிலேயே அரசியல் நுட்பங்களை ஊன்றிக் கற்கத் தொடங்கினன். இவனுடைய சூக்கும அறிவும், குடிகளிடம் காட்டும் அன்பும் யாவர் மனத்தையும் கவர்ந்தன.

3. குலோத்துங்கன் தன் பாட்டன் இராசேந்திர சோழனால் இளவரசு பட்டத்தைப் பெற்றதும், திக்கு விஜயம் செய்யத் தொடங்கினான். இவனுடைய கம்பீரப் பார்வையும், வீரப் போக்கும் மற்ற அரசருக்கு மிக்க அச்சத்தை விளைவித்தன. ஆதலின், அம்முடி மன்னர் இவனுக்குப் பரி, கரி, பொற்குவியல்களைக் கொடுத்து, இவனிடம் நட்புக் கொண்டனர்.

4. இங்ஙனம் குலோத்துங்கன் யாருக்கும் அஞ்சா ஆண் சிங்கமென வாழ்ந்து வருங்கால், இராசேந்திரன் இம்மண்ணுலகை நீத்தனன். சோழ அரசு குலோத்துங்கனைச் சார்ந்தது. இவன் குடிகள் யாதொரு குறையுமின்றி வாழ்ந்தார்கள். பெரும்போரையும் சிறு விளையாட்டெனக் கருதினவன் குலோத்துங்கன். இவன் கைப்பற்றிய நாடுகள் பல.

5. இங்ஙனம் குலோத்துங்கனுக்குக் கப்பஞ் செலுத்துபவர் பலராயினர். ஒரு சமயம் இவன் காஞ்சீபுரத்திலிருந்த தன் அரண்மனையில் வீற்றிருக்குங்கால், பலர் திறையைக் கொணர்ந்து செலுத்தினர். இவன், ஈராண்டு அரசிறை செலுத்தாதவன் வடகலிங்கத்து அரசனான சோடகங்கன் என்பதை அறிந்தான்.

6. குலோத்துங்கனுக்குக் கோபம் பொங்கியது; புருவம் நெரிந்தது. இவன், "நம் ஆணைக்குக் கீழ்ப்படியா அரசனை உடனே கொணர்க!" எனக் கூறினன். இதைச் செவியுற்ற சேனைத் தலைவனான

கருணாகரத் தொண்டைமான், மதகிரி என்னும் யானை மீதேறி, சேனைகளுடன் கலிங்கநாட்டை நோக்கிச் சென்றான்.

7. இவனுடன் வாணகோவரையன், மும்முடிச் சோழன், பல்லவர்க்கரசு ஆகிய சேனைத்தலைவரும் போருக்குப் புறப்பட்டனர். செல்லும் வழியில் அந் நாட்டைச் சார்ந்த பல கிராமங்களிற்புகுந்து சூறை யாடினர்; சிலவற்றைத் தீக்கிரையாக்கினர். இவர் களை எதிர்த்து வந்தவர்களுள் பலர் எமனுலகஞ் சென்றனர். இக்கொடுமைகளைக் கண்ட பெண் டிருள் பலர், தம் கற்பைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டிப் புறக்கடைப் பக்கமாக ஓட்டம் பிடித் தனர்; ஆடவருட்சிலர், பகைவருக்குப் பயந்து ஓடி மறைந்தனர். 'பிடி! குத்து! அடி! உதை!' என்னும் ஒலியே எங்கும் பரவியிருந்தது. பலர், "சோழ மன்னருக்கு வெற்றி! குலோத்துங்கருக்கு வெற்றி!" எனக் கூறிக் கூத்தாடினர்.

8. இவற்றைக் கண்டு நடுங்கிய கலிங்க நாட்டு மக்கள், "ஐயோ! நாம் எங்குச் செல்வோம்! இவ் வீரரை எதிர்த்து நிற்பவர் இந்நாட்டில் யாருளர்! நம் மன்னர் இறை செலுத்தியிருப்பின், இத் துன்பம் நேர்ந்திராதே! குகையில் படுத்துறங்கும் சிங்கத்து வாயில் கொம்பிட்டுத் தூண்டியதுபோன் றன்றோ நம் அரசனது செய்கை முடிந்தது!" எனப் பலவாறு வருந்தினார்கள். சிலர், இச்செய் தியை அரசனிடம் சென்று முறையிட்டனர்.

9. பகைவர் கொடுஞ்செயலைக் கேட்ட கலிங்கத்து அரசன், உடனே போருக்குப் புறப்படுமாறு தன் சேனைத்தலைவருக்குக் கட்டளையிட்டான். போருக்குக் குலோத்துங்கன் வாராமல், கருணாகரன் வந்துள்ளமையின், அவனுக்கும் மற்றப் படைகளுக்கும் அஞ்ச வேண்டா என்பதும், அவைகளை எளிதில் வென்றுவிடலாமென்பதும் சோடகங்கனது எண்ணம். ஆனால், இது வெறுமயக்கு என்பதை அவன் அமைச்சனான எங்கராயன் உணர்ந்தான். தண்டித்தாலும் அரசனுக்கு நல்லதைச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தினனாய், "அரசரே, யான் சொல்வதைச் சிறிது பொறுமையோடு கேட்பீராக: சோழனது சேனையை இவ்வளவு எளிதாக நினைத்தல் தவறு. எத்துணை வீரரையும் வெல்லுதற்கு அவனுடைய சேனை போதுமானதாகும். பாண்டியரைத் தோல்வியுறச் செய்து பாண்டி நாட்டைக் கைப்பற்றியதும், காந்தளூர்ச்சாலையைக் கொண்டதும் இச்சேனையேயல்லவா? இன்னும் எத்தனையோ பேரை முதுகிடச்செய்த இச்சேனையின் திறம் நீவிர் அறியாததன்றே? ஒரு முறை நம் சேனையே இச்சேனையினிடம் பட்ட பாட்டை நாம் மறக்க முடியுமா? ஆகையால், நாம் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்திவிட்டுக், குலோத்துங்கனுடன் சமாதானம் செய்துகொள்வதே தகுதியுடையதாகும்! இன்றேல், நாமும் நாடும் பல துன்பங்களுக்கு உட்பட நேரிடும்," என்று அஞ்சா நெஞ்சத்துடன் எடுத்துரைத்தான்.

10. எங்கராயன் கூறிய வார்த்தைகள் அரசனுக்குச் சினத்தை மூட்டின. அவன் கண்கள் சிவக்க, "மதியற்ற மந்திரியே, நம் வன்மையையும், படைகளின் திறமையையும் சிறிதாயினும் உணர்ந்தாயில்லை; நாம் இருக்கும் நாட்டிலேயே நம்மை எதிர்த்து வந்தவன் உயிருடன் திரும்பிச் செல்ல முடியுமா? அவனுக்கு இறுதிக்காலம் குறுகிவிட்டதாக நினைக்கவேண்டாவா? பயனற்ற வார்த்தைகளைப் பேசும் நீ தூரச்செல்!" எனப் பலவாறு வைது, தன் நாற்படைகளும் சோழன் படைகளின் மேல் எதிர்த்துச் செல்லுமாறு பணித்தான்.

11. இரு படைகளும் பொருதன. அங்கங்கள் அற்றுவீழ்ந்த யானைகள் பல; உயிர் துறந்து வீழ்ந்த புரவிகள் பல; மண்ணில் சாய்ந்த மக்கள் அளவிறந்தவர்கள். செந்நீர் ஆறு வெள்ளம் என ஓடிற்று; இங்ஙனம் போர் நடந்தது சிறிது காலமேயாயினும், இதனல் உண்டான நஷ்டம் மிகப் பெரியதாகும்.

12. ஆயினும், விரைவில் கலிங்கப் படை வீரருள் பலர் முதுகு காட்டி ஓடினர்; பலர் இறந்து பட்டனர்; பின்பு சோழர் சேனையை எதிர்த்து நிற்பதற்கு ஒருவரும் இலராயினர். கலிங்க அரசனும் காட்டிற்குள் சென்று மறைந்தான். சோழனுடைய வெற்றி முரசம் முழங்கிற்று. எங்கும் சோழர் கொடிகள் பறந்தன. இறுதியில் கருணைகரத் தொண்டைமான் கலிங்க மன்னனைச் சிறைப் படுத்தினன்.

13. போரின் முடிவையறிய ஆவலுடன் நோக்கிக்கொண்டிருந்த குலோத்துங்கன் முன்னிலையில் கருணுகரன் தான் கொணர்ந்த நிதிக்குவியலையும், கலிங்க நாட்டரசனையும் சமர்ப்பித்துப் பணிந்தான். குலோத்துங்கன் உவகைமேலிட, கலிங்க நாட்டில் சயத்தம்பம் நாட்டினன். கருணுகரனுக்கும், அவனுடன் சென்ற வீரர்களுக்கும் பல பரிசுகளை வழங்கி, அவர்களைக் கௌரவப்படுத்தினன். கருணுகரனுக்கு மகாசாமந்தன் கருணுகரன் என்னும் பட்டப் பெயரும் வழங்கப்பட்டது. கருணுகரன், கும்பகோணத்தருகிலுள்ள வண்டுலாஞ்சேரி என்னும் இடத்தைத் தலைநகரமாக்கிக்கொண்டு, தொண்டை நாட்டின் சிறு பகுதியை ஆண்டு வந்ததால், அவனுக்குத் 'தோண்டைமான்' என்னும் பட்டப் பெயர் வழங்கலாயிற்று.

14. குலோத்துங்க சோழன் நுட்ப அறிவுடையவனும், செங்கோலனும், அஞ்சா வீரனுமாயிருப்பினும், கருணுகரனலேயே பெருங்கீர்த்தி பெற்ருன். கலிங்கநாட்டின் வெற்றியே குலோத்துங்கனுக்குப் பெரும்புகழை உண்டாக்கியது. இவனுடைய ஆண்மையும், அஞ்சா நெஞ்சமுமே சேனைத்தலைவரையும், மற்றவரையும் ஊக்கிவிட்டன. அவ்வமயம் வேந்தனது சம்ஸ்தானப் புலவராய் இருந்த ஜயங்கொண்டார், இக்கலிங்கத்துப் போர்த்திறத்தைச் சிறப்பித்து, 'கலிங்கத்துப் பரணி' என்னும் ஒரு சிறந்த நூலை இயற்றினர். அஃது அக்காலத்திலேயே அரசன் முன்னிலையில் கற்றவர் கூட்டத்தில் அரங்கேற்றப்பட்டது.

## அருஞ்சொற்பொருள் :

உவந்து - மனமகிழ்ந்து, வற்புறுத்துவது - உறுதிப் படுத்துவது, திக்கு விஜயம் - எட்டுத்திக்குகளிலும் சென்று அரசரை வெல்லுதல், நீத்தனர் - நீங்கினர், திறை - அரசிறை, சூறையாடல் - கொள்ளையிடல், பணித்தான் - கட்டளையிட்டான், புரவி - குதிரை, சயத்தம்பம் - வெற்றித்தூண், பரணி - ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனைத் தலைமகனாகக்கொண்டு பாடும் ஒரு பிரபந்தம்.

## வினாக்கள் :

1. சோழநாட்டின் சிறப்பை எந்தப் பழமொழியால் அறியலாம்?

2. குலோத்துங்கன் வடகலிங்கத்தின்மீது போர் தொடங்கியதற்குக் காரணம் யாது?

3. கருணாகரத் தொண்டைமானுடன் சென்ற சேனைத் தலைவர்கள் யார்? சேனைகள் பகைவர் நாட்டில் செய்தவை யாவை?

4. சோடகங்கன் ஏன் எதிரிப்படைக்கு அஞ்சவில்லை?

5. எங்கராயன் வார்த்தைகளிலிருந்து சோழன் சேனைகளைப்பற்றி நீ அறிவது யாது?

6. கலிங்கப் போரின் முடிவைச் சுருக்கி எழுதுக.

7. கருணாகரனைப்பற்றிச் சுருக்கி எழுதுக.

8. ‘பரணி’ என்னும் பிரபந்தத்தின் இலக்கணம் என்ன?

## பயிற்சி :

1. பெயர்ச்சொற்களைப் பயனிலையாகக் கொண்டு முடியும் மூன்று வாக்கியங்களை எழுதுக.

2. இப்பாடத்திலுள்ள வினையாலணையும் பெயரைக் குறிப்பிடுக.

3. அஃறிணை வினையைக்கொண்டு முடியும் மூன்று வாக்கியங்களைக் கூறுக.

4. 'நம் ஆணைக்குக் கீழ்ப்படியாத அரசனை உடனே சென்று கொணர்க!'—சந்தர்ப்பங் கூறுக.

5. வற்புறுத்துவது, முகபடாம், உய்வித்தல், திக்கு விஜயம்—இவைகளை வாக்கியங்களில் அமைக்க.

## 7. நெற்பயிர்

1. உலகில் நடைபெறும் தொழில்களுள் பயிர்த்தொழிலே உயிர்த்தொழிலாகும். மக்கள் தோன்றிய போதே இதுவும் உடன் தோன்றி யிருக்க வேண்டும். மனிதன் ஏதேனும் ஒன்றை உற்பத்தி செய்யக் கற்றுக்கொள்வதற்கு முன்பே இது படைக்கப்பட்டிருக்கலாம். இன்றேல், உயிர்கள் உணவின்றி வருந்த நேரிடுமல்லவா? ஆனல், பின்பு மனிதன் தன் பகுத்தறிவினால் இப்பயிர்த் தொழிலைப் பெருக்கிக்கொண்டான்.

2. இப்பயிர்கள் பல வகைப்படும். அவற்றுள் இங்கு நெற்பயிரைப்பற்றிப் படிக்கலாம்:

3. பண்டைக்காலந்தொட்டே இந்தியாவின் இன்றியமையாத பயிர் நெல்லாகும். தென்னிந்தியர் அரிசியையே முக்கிய உணவாகக் கொண்டுள்ளனர். இந்நெற்பயிருக்குக் காலத்தில் பெய்யும் மழை அவசியம். எங்கெங்கு மழை அதிகமாகப் பெய்கிறதோ, அங்கங்கெல்லாம் மிகுந்த நெல்

விளையும். சில போது விடா மழையினால் நெற்பயிர் அழுகிப்போவதுமுண்டு. ஆனால், இந்நிலை எப்போதோ ஒரு போதுதான் நிகழும். அச்சமயத்திலும் உழவர் அதற்கேற்ற முறைகளைக் கையாண்டு, பயிரைக் காப்பாற்றுவார்கள்.

4. சில போது மழை குறைவாயிருப்பினும், மேட்டூர் அணை போன்ற அணைக்கட்டுகள், ஏரி



முதலிய நீர் நிலைகள் ஆகிய இவற்றின் உதவியால், உழவர் வயல்களுக்கு நீர் பாய்ச்சி நெற்பயிரை விளைக்கின்றனர். ஆயினும், மழைத்தண்ணீரால் பயிர் செழிப்புடன் வளர்வது போன்று, மனிதன் பாய்ச்சும் நீரினால் வளம் அடைவது இல்லை. குழவிக்குத் தாய்ப்பாலைப் போன்றது பயிர்களுக்கு மழை; விலைப்பாலைப் போன்றது பாய்ச்சும் நீர். **வண்டல் மண்ணுள்ள இடத்தில் நெல் நன்றாக**

வளரும். வண்டல் மண், பாய்ச்சும் தண்ணீருடன் கலந்து வருதல் உண்டு. இத்தகைய நிலங்கட்கு அதிக எரு வேண்டுவதில்லை. களிமண் அல்லது மண் கலந்த களிமண் நெற்பயிருக்கு ஏற்றது. சில மரங்களின் இலைகள், தழைகள், பிண்ணாக்குகள், குளத்திலிருக்கும் வண்டல், மாட்டுச்சாணம் இவை பயிர்களுக்கு எருவாக உபயோகப்படுகின்றன. ஆனால், பெரும்பான்மையும் பயன்படுவது மாட்டுச் சாணமேயாகும்.

5. நெல்வயல்களில் எப்பொழுதும் தண்ணீர் தேங்கியிருத்தல் வேண்டும். ஆதலின், அதன் வரப்புகள் உயர்ந்திருக்கும். அதனால்தான் அவ்வை யார் ஒரு கால் தம்மை வணங்கிய அரசனை "வரப்புயர!" என வாழ்த்தினராம். "வரப்புயரின், நீர் தங்கும்; நீர் தங்கின், நெல் உயரும்; நெல் உயரின், குடி உயரும்; குடி உயரின், கோன் உயர்வான்," என்பது அதன் கருத்தாகும்.

6. இந்தியாவில் விளையும் நெல்லிற் பாதி வங்காளத்திலும், பாதி ஐக்கிய மாகாணம், சென்னை ராஜதானி, மத்திய மாகாணம், பம்பாய் முதலிய வேறு இடங்களிலும் விளைகின்றது.

7. சென்னை ராஜதானியிலும் வங்காளத்திலும் கால்வாய்ப் பாசனமுள்ள இடங்களில் இரண்டு அல்லது மூன்று போகம் பயிராகும்; மற்ற இடங்களில் ஒரே முறைதான் விளையும். பலர் நெல்லை அறுத்தவுடன் அந்நிலத்தில் மற்றத் தானி

யங்களை விதைக்கின்றனர். ஏனென்றால், நெல்லுக்கு வேண்டிய சத்துப்பொருள் வேறு; மற்றத் தானியங்களுக்கு வேண்டிய சத்துப்பொருள் வேறு. இவ்விரண்டும் நிலத்திலும், இட்ட எருவிலும் உள்ளன. நெல்லுக்குப் பின்பு மற்றைய தானியங்களை விதைக்கின், மீதப்பட்டுள்ள சத்தைப் பெற்றுச் செழிப்புடன் வளர்கின்றன. உழவன் அதன் வளர்ச்சிக்கு மிக்க உழைப்பைக் கொள்ள வேண்டுவதில்லை.

8. நெல்லை இரண்டு விதத்தில் பயிரிடுகிறார்கள்: ஒன்று, விதைகளை விதைத்தல்; மற்றொன்று, விதைத்த விதைகளிலிருந்து உண்டான நாற்றுக்களை நடுதல். இரண்டாவது பெரிதும் வழக்கத்திலிருப்பது. முதலில் ஒரு நாற்றங்காலை நன்றாக உழுது, உலர்ந்த இலை புல் முதலியவைகளை எருவாக இட்டு, நெல் விதைகளை நெருக்கமாக விதைப்பார்கள். அவ்விதைகள் நாலைந்து வாரங்களில் நடுவதற்குத் தகுந்த அளவாக வளர்ந்துவிடும். அவற்றைப் பிடுங்கிப் பண்படுத்தப்பட்டிருக்கும் வயலில் நாற்றாக ஆறு அல்லது எட்டு அங்குல இடை வெளி விட்டு நடுவார்கள். அவ்வயல் நன்றாக உழுது நல்ல உரமிட்டுச் சேறாக்கப்பட்டதாய் இருக்க வேண்டும். அப்போதுதான் நாற்றுக்களைக் கையினால் சிறிது ஆழத்தில் புதைக்க முடியும். ஏறக்குறைய ஒரு வாரத்தில் இந்த நாற்றுக்கள் பூமியில் வேரூன்றிப் பசுமை நிறத்தைப் பெற்று, வளரத் தொடங்கும். ஓரிடத்திலிருந்து பிடுங்கும் நாற்றுக்களை நடுதற்கு

அதைப்போன்ற எட்டு அல்லது பத்து மடங்கு பரப்புள்ள இடம் தேவையாயிருக்கும். நாற்றங் காலில் நீரை நிரப்பிவைத்து ஒரு வாரங்கழித்தே நாற்றுக்களைப் பிடுங்க வேண்டும். அன்றேல், அவற்றைப் பிடுங்கும்போது வேர்கள் அறுந்துபோகும்.

9. சின்னாட்களுக்குப் பிறகு பயிர்களுக்கு இடையிடையே வளர்ந்திருக்கும் களைகளைப் பிடுங்கி விடுவது இன்றியமையாததாகும். அல்லாவிடில், அவைகள் விரைவில் வளர்ந்து நெற்பயிரை நெருக்குவதால், நெற்பயிர் ஓங்கி வளராமல், மெலிந்து விடும். அன்றியும், நிலத்திலுள்ள சத்தில் பாதிப் பங்கை அவைகள் உண்டுவிடுவதனால், நெற்பயிர் சத்தற்றுப்போகும்.

10. உழவன், பயிருக்கு நீர் பாய்ச்சல், நாற்று நடல், களை பிடுங்கல் முதலியவற்றை அந்தந்தக் காலங்களில் செய்தல் வேண்டும். எல்லாவற்றிலும் நிலத்தை ஆழ உழுதலும், உரமிடுதலும் இன்றியமையாதனவாகும். உழவருக்கு வேண்டுவது மடியற்ற முயற்சியாகும். உழவுத்தொழில் இன்றேல், உலகம் இல்லை. ஆதலின், உலகமே உழவர் கையிலேதான் இருக்கிறது. அதைத்தான் தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும்,

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.'

என்று கூறிப்போந்தார்.

11. நம் நாட்டில் தை மாசி மாதங்களில் ஒரு முறையும், ஐப்பசி கார்த்திகை மாதங்களில் மற்

றொரு முறையும் அறுவடை செய்வதுண்டு. பெரும் பான்மையான நிலங்களில் ஒருமுறைதான் அறு வடை செய்ய முடியும். அறுவடைக்குப் பத்து நாட் களுக்கு முன்பே, வயலிலிருக்கின்ற தண்ணீரை வடிய வைப்பர். பயிர்களைத் தரை மட்டத்திற்கு அறுத்துக் கட்டுக்கட்டாகக் கட்டிக் களத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள். அக்கதிர்களை அரி அரியாய் எடுத்துத் தரையில் ஓங்கி அடித்தும், மாடுகளை விட்டு மிதித்தும் அவற்றிலுள்ள நெல்லைப் பிரித்தெடுப்பார்கள். வைக்கோல், மாடுகளுக்குத் தீனியாகும்.

12. இம்முறையில் இந்நாட்டில் விளையும் தானி யங்கள் கம்பு, சோளம், கேழ்வரகு, தினை, கோதுமை ஆகிய பலவாகும். இவைகளுள் ஒவ் வொன்றையும் பயிரிடத் தனிப்பட்ட முறைகள் இருக்கின்றன. ஆயினும், இப்போது நம் நிலங் களில் விளையும் உணவுப் பொருள்கள் நம் நாட்டு மக்களுக்கும் போதுவனவாயில்லை. ஆதலாற்றான் அரசாங்கம் நமக்கு உணவுப் பங்கீட்டை ஏற்படுத்தி யிருக்கிறது. மேல் நாட்டாரைப் போன்று உழவு முறைகளையறிந்து, கரம்பு நிலங்களைச் சாகுபடி செய்யும் தன்மைகளை எப்பொழுது நம் நாடு தெரிந்துகொள்ளுகின்றதோ, அப்பொழுதுதான் உணவுப்பஞ்சம் நம் நாட்டை விட்டு விலகும். இதற்கு அரசாங்கம் பெருமுயற்சியைக் கொண்டுள் ளது. அதன் முயற்சி வெற்றி பெறுவதாக! நாடு பசியின்றி வாழ்வதாக!

### அருஞ்சொற்பொருள் :

நிகழும் - நடைபெறும், வளம் - செழுமை, வரப்பு - வயல்களின் எல்லை, போகம் - முறை, நாற்று - முளைப் பயிர், உரமிட்டு - எருப்போட்டு, களை - புல் பூண்டு முதலியன, மடி - சோம்பல்.

### வினக்கள் :

1. இந்தியாவில் எப்பயிர் சிறந்தது?
2. நெற்பயிருக்கு எருக்கள் எவை?
3. 'வரப்புயர' என்பது யார் வார்த்தை? இதன் பொருள் என்ன?
4. ஏன் உழவர் நெல்லுக்குப் பின் மற்றத் தானியங்களை விதைக்கின்றனர்?
5. நெல்லை எத்தனை விதத்தில் பயிரிடலாம்?
6. நாற்று நடுதல் எப்படி?
7. களைகளை ஏன் களைய வேண்டும்?
8. உழவன் உயர்வடைவதற்கு வழி யாது?

### இலக்கணம் :

1. இப்பாடத்திலுள்ள ஆகுபெயர், வினையாலணையும் பெயர்களை எடுத்து எழுதுக.
2. 'செய்யும்' என்னும் வினைமுற்றின் இலக்கணம் என்ன? அதற்கு உதாரணமாக நான்கு வாக்கியங்களை எழுதுக.
3. எதிர்கால வினைகள் சிலவற்றை எழுதுக.
4. வளர, உயர, விதை, நடு, தொடங்கு, சொல் - இவை பகுதியாக வருமாறு முக்கால வினைமுற்றுக்களை அமைக்க.

பயிற்சி :

1. நெற்பயிருக்கும் சான்றோருக்கும் ஒப்புக்கூறுக.

2. உழவன் உழைப்பைப்பற்றியும், சிறப்பைப் பற்றியும் ஒரு கட்டுரை வரைக.

# 8. சுதந்தரநாட்டின் சீர்மை

1. 'சுதந்தரம்' என்பதற்கு, ஒருவர் தம் மனம் சென்றவாறு எண்ணுதல், சொல்லுதல், செய்தல் என்பதே பொருள் எனச் சிலர் கருதுகின்றனர். ஆயினும், ஒருவருக்கு உண்டாகும் உயரிய கருத்துக்கள், வீரச்செயல்கள், கம்பீரப் பேச்சுக்கள் இவற்றை அஞ்சாமல் வெளிப்படுத்த உரிமை கொடுப்பதே சுதந்தரம் எனப்படும். இவற்றிற்குத் தக்க வழியில்லாத போது, மக்களுக்கு ஏற்படும் மனக்கிளர்ச்சியும், உடல் ஊக்கமும் குன்றுகின்றன. நாளுக்கு நாள், "இதை நாம் சொல்லுதல் கூடாது; இதைச் செய்தல் நம்மால் முடியாது; இதை நாம் நினைப்பதில் பயனில்லை," என மக்கள் எண்ணியெண்ணித் தங்கள் அறிவையும், ஆற்றலையும் அடக்கிக்கொள்ள நேர்கின்றது. இதனால் உண்டாவது, அடிமை மனப்பான்மையே. இத் தகைய மக்களிடமிருந்து எங்ஙனம் கம்பீரப் போக்கை எதிர் பார்க்க முடியும்?

2. இச்சுதந்தரப் போக்கை மனத்தில் வைத்துக்கொண்டு, ஸ்விட்ஜர்லாந்து என்னும் தேசத்தை நோக்குவோம். இதன் நான்கு புறமும் ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி, பிரான்சு ஆகிய நான்கு



ஸ்விட்ஜர்லாந்து

தேசங்களும் சூழ்ந்திருக்கின்றன. இவை நான்கும் அரசியல் சூழ்ச்சிகளையும் படைதிரட்டுதலையும் மேற்கொண்டு, இரண்டு பெரிய உலக யுத்தங்களிலும் கலந்துகொண்டன. இவ்விடங்களில் உண்டான பீரங்கி முழக்கங்களும், குண்டுகளின் வீச்சும், மக்களின் பரபரப்பும் அளவிடற்பாலன அல்ல. அவ்வமயம் இத்தேசங்களின் உணவு விடுதிகளில் பலர் வந்து உண்ணும் ஒலியும், கண்ணாடிப் பாத்திரங்கள் உடைபடும் ஓசையும் கேட்குமாம். அவைகளில் இவர்கள் நெஞ்சம் செல்லுவதேயில்லையாம். "எப்போது அபாயச் சங்கு அலறுமோ! என்று ஒற்றர்கள் உளவறிந்து செல்வார்களோ!" என்னும் அச்சமும் இவர்கள் மனத்தில் தோன்றியதாம். சமாதான காலத்தைப்போன்றே தங்கள் காரியங்

களில் ஈடுபட்டு எதிலும் தொடர்பற்று வீரத்துடன் விளங்கினர்களாம். ஈதன்றோ மனத்திட்பம்! ஈதன்றோ நெஞ்சுரம்! ஈதன்றோ வீரம்! இம்முறையில் ஸ்விட்ஜர்லாந்து ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளாகப் போர் என்பது இன்னதென்பதையே தெரியாமலன்றோ தன் காலத்தை அமைதியுடன் கழித்து வருகிறது! இது விந்தையிலும் விந்தையே!

3. ஸ்விட்ஜர்லாந்து, சென்னை மாகாணத்தின் பாதிப் பரப்பையும், சென்னை நகரத்தினும் இரண்டரைப் பங்கு மக்களையும் கொண்ட ஒரு சிறு நாடாய் இருப்பினும், ஐந்து கண்டங்களுக்கும் ஒரு சான்றாய்த் துலங்குகிறது. மலையடர்ந்த இந்நாட்டில் பகைவர் எளிதில் உட்புக முடியாததலின், இந்நாட்டவர் எதிரிகளைப்பற்றிக் கவலையற்றுக் காலத்தைக் கழிக்கின்றனர் எனச் சிலர் எண்ணவும் கூடும். இஃதொரு சிறந்த காரணமாகாது. குன்றுகளை அசைத்தாலும் அசைக்கலாம்; இவர்களுடைய நெஞ்சுரத்தை எக்காலத்திலும் அசைக்க முடியாதென்பது ஒருதலை.

4. உண்மை ஜனநாயகம் இந்நாட்டிலுள்ளது. உயர்ந்த சுதந்தரம் வாய்ந்த இந்நாட்டின் இளைஞர், மூன்று வயதிற்குமேல் பள்ளி செல்லாமலிருத்தலும், பதினைந்து வயதிற்குள் படிப்பை முடித்துக் கொள்ளலும் இயலா. கல்வியின்றிக் காலங்கழிக்கச் சிறுவர் சுதந்தரம் பெற்றிருக்கவில்லை. அத்தகைய பிள்ளைகளைச் சோறிட்டு வளர்க்கும் பெற்றோர் அபராதம் அடைவர்.

5. மக்கள் ஜெர்மன், பிரெஞ்சு, இத்தாலி, ரோமன் ஆகிய நான்கு மொழிகளையேனும் கற்க வேண்டும். ஆனல், இவற்றில் ஏற்றத்தாழ்வுகள் உண்டு. ஜெர்மனை எழுபது பங்கும், ரோமனை இருபது பங்கும், பிரெஞ்சை எட்டுப் பங்கும், இத்தாலியை இரண்டு பங்கும் கற்கின்றார்கள். இந் நான்கு மொழிகளையும் எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டாலல்லாமல், தங்களைச் சூழ்ந்திருக்கும் நான்கு பெரிய தேசங்களிலும் தொடர்பு கொண்டு செல்வாக்கடைய முடியாதென்பது இவர்களுடைய ஆழ்ந்த எண்ணம்.

6. இந்நாட்டில் பள்ளிக்கூடங்களிலும், சர்வ கலாசாலைகளிலும், தொழிற்கல்விச்சாலைகளிலும், மாணவரைச் சேர்க்குங்கால் இவர்கள் என்ன இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதை விசாரித்தறிதல் இல்லை. நாட்டுச் சிறுவர் உயர் கல்வியைப் பெற்று ஓங்க வேண்டுமென்பதே இவர்களுடைய எண்ணம். ஜாதி மதச் சார்பாக ஏதேனும் சூழ்ச்சி செய்பவர் நாட்டினின்றும் துரத்தப்படுகின்றனர். பல விதத் தொழில் முறைகளைக் கற்பிக்கும் சர்வ கலாசாலைகள் ஐந்து இச்சிறு நாட்டில் அமைந்துள்ளன. ஸ்விட்ஜர்லாந்தின் இஞ்சினியர்கள் மிக்க திறமை வாய்ந்தவர்களெனப் புகழ் படைத்துள்ளார்கள்.

7. இந்நாட்டுச் சிறந்த தொழில்களுள் ஒன்று கடிகாரம் செய்வது. இதற்கென நூற்றுக் கணக்கான தொழிற்சாலைகள் உள்ளன. இங்குப் பல

வகையான கடிகாரங்கள் செய்யப்படுகின்றன. ஓராண்டில் அறுபது லட்சம் கடிகாரங்கள் வெளி நாடுகளுக்குச் செல்லுகின்றனவாம். இவற்றைப் போன்று கடிகாரம் செய்வதற்கு இன்னும் எந்த நாடும் முன் வந்திலதாம். இதனல், இவர்களுடைய நுட்ப அறிவும், கைத்தொழில் ஆற்றலும், விடா முயற்சியும், சுறுசுறுப்பும் தெள்ளிதின் விளங்கு கின்றன அல்லவா?

8. ஒவ்வொரு பிள்ளைக்கும் எட்டாவது வயதி லிருந்து உடற்பயிற்சியும், பதினெட்டாவது வய திலிருந்து இராணுவப்பயிற்சியும் அளிக்கப்படுகின் றன. போர் என்பது இன்னதென்பதே இவர்கள் அறியாதிருப்பினும், தங்கள் தேசத்தைப் பாது காக்கும் முறையை நன்கு தெரிந்துகொண்டுள்ளார் கள். சுதந்தர மகனுகவும், உழைப்பாளியாகவும், வீரனுகவும் விளங்கும்படி ஒவ்வொருவனும் பெற் ரேராலும் ஆசிரியர்களாலும், வளர்க்கப்படு கின்முன்.

9. இது வனப்பு மிக்க நாடாதலின், இங்கு யாத்திரிகர் கூட்டம் குறைவதே இல்லை. இது சுதந்தர தேசமாயிருத்தலின், முடிதுறந்த மன்னர், பதவி நீங்கின ராஜ தந்திரிகள், பட்டம் துறந்த பிரபுக்கள், புரட்சி வீரர்கள் முதலியவர்கள் இவண் வந்து சுயேச்சையுடன் வாழ்கின்முர்கள். ஸ்கையிங் என்னும் தேசீய விளையாட்டைக் கருதியும் இங்கு வந்து குவிகின்றனர். இதை ஐரோப்பாவின் விளை யாட்டு மைதானம் என்பர். இச்சிறு தேசத்தில்

பெரிய உணவு விடுதிகள் மூவாயிரம் இருக்கின்றன. இவை வந்தவர்களுக்கெல்லாம் உணவும், உறையுளும் தந்து உதவுகின்றன.

10. உயர்ந்த மலைச் சிகரங்களும், நதிகளும் நாட்டின் காற்பாகத்தைக் கவர்ந்துகொண்டிருக்கின்றன. மிகுதியில் மூன்றில் ஒரு பாகந்தான் விளைநிலமாய் உள்ளது. ஆயினும், பொது மக்களில் பெரும்பாலார் விவசாயிகளாயிருத்தலின், சிறு பகுதியையும் தரிசு நிலமாக விடாமல், சாகுபடி செய்கின்றனர். இந்நாட்டுப் பசுக்கள் நம் நாட்டுப் பசுக்களைக்காட்டிலும் ஐந்து மடங்கு அதிகமான பாலைத் தருகின்றனவாம்.

11. சோம்பலுடையவரையும், பயனற்ற வார்த்தைகளைப் பேசுகின்றவரையும் இவர்கள் இழிவாக நினைக்கின்றார்களாம். 'ஏழை என்பவன் இருத்தல் கூடாது; குடும்பம் மேன்மேலும் ஏழ்மையில் மூழ்குதல் கூடாது,' என்பது இவர்களுடைய கோட்பாடு. எவ்வாண்டு அரசாங்கத்துக்கு வேண்டும் அளவுக்கு ஊதியம் கிடைத்துவிடுகின்றதோ, அவ்வாண்டு மக்கள் வரி செலுத்த வேண்டுவதில்லை.

12. மிகப் பெரிய நதிகள் இங்கு உற்பத்தியாகின்றமையின், அந்நீரோட்டத்திலிருந்து மின்சாரச் சத்தியைப் பெருக்கிக்கொள்கின்றார்கள். இந்நாட்டு மக்கள் உடல் வன்மையும், உளம் வன்மையும் பெற்று, ஒரு குறைவுமின்றி வாழ்ந்து வருகிறார்கள். சிறியவருக்கும் பெரியவருக்கும் பொது நலத்திலும்,

சுதந்தரத்திலுமே கண்ணும் கருத்தும் பதிந்துள்ளன.

13. 'புதியதாகச் சுதந்தரம் பெற்ற நம் இந்திய நாடு ஸ்விட்ஜர்லாந்தின் நிலையை விரைவில் பெற்று வாழ வேண்டும்,' என்னும் எண்ணம் யாவர் மனத்திலும் வேரூன்றுதல் இன்றியமையாதது. அதன் பொருட்டு அறிவும் ஆண்மையும் வாய்ந்த தலைவர்கள் பெரும்பாடு பட்டாலும், பொது மக்களும் அவர்களுடன் ஒத்துழைத்தல் வேண்டும். அப்பொழுதுதான் நம் இந்தியாவிலும் சுதந்தர ஸ்விட்ஜர்லாந்தைக் கண்டு இன்புறலாம். இந்தியாவும் இந்தியரும் நலம் பெற்று வாழ்க!

அருஞ்சொற்பொருள் :

உரிமை - சொந்தம், மனப்பான்மை - மன இயல்பு, சூழ்ச்சி - உபாயம், வீச்சு - எறிதல், இராணுவப்பயிற்சி - படைப் பயிற்சி, விவசாயிகள் - பயிர்த்தொழில் செய்பவர்கள்.

வினாக்கள் :

1. மக்களுக்கு அடிமை மனப்பான்மை உண்டாவதற்குக் காரணம் யாது?

2. இரண்டு உலக மகாயுத்தங்களிலும் ஸ்விட்ஜர்லாந்து எந்நிலையிலிருந்தது?

3. இந்நாட்டில் யாவரும் கல்வியுடையவராய் இருத்தற்குக் காரணம் என்ன?

4. இவர்கள் என்னென்ன தொழில்களை எவ்வெம் முறையில் கற்கின்றார்கள்?

5. இந்நாட்டினர் நுட்ப அறிவுக்கும் கைத்தொழில் திறமைக்கும் ஒரு சான்று காட்டுக.

6. இந்நாட்டு மக்கள் இன்புற்று வாழ்வதற்குக் காரணங்கள் என்ன ?

பயிற்சி:

1. முதல் பத்தியில் உள்ள, 'இதனால்........மனப் பான்மையே'—என்னும் வாக்கியத்தின் எழுவாய் பய னிலைகளைக் குறிப்பிடுக.

2. இப்பாடத்திலுள்ள இடுகுறி காரணப் பெயர் களை எடுத்து எழுதுக.

3. இந்நாட்டு மக்களின் வாழ்க்கையைப்பற்றி ஒரு பக்கத்தில் ஒரு கட்டுரை வரைக.

## 9. கௌதம புத்தர்

1. இந்திய நாடு கல்வியிலும் நாகரிகத்திலும் பல கலைகளிலும் மட்டும் சிறந்து விளங்கியதன்று; பல அறிஞர் அவதாரங்களினாலும் அலங்கரிக்கப் பட்டதாகும். எப்போது அறநிலை குலைகிறதோ, அப்போதெல்லாம், தந்நலங்கருதாச் சான்றோரும், தத்துவ ஞானிகளும் தோன்றி, நம் தேசத்தைத் திருத்திச் செம்மைப்படுத்தினர். அல்லாவிடில், பற் பல இடுக்கண்களுக்கிடையில் இந்நாடு இத்துணை நலத்துடன் இருப்பதும் இயலாததாகும். இங்ஙனம் நாட்டை நலமுறுத்தத் தோன்றிய உத்தமருள் கௌதம புத்தரும் ஒருவராவர்.

2. வடவிந்தியாவில் காசி நகருக்கு வடக்கே ரோகிணி என்னும் நதிக்கரையில், கபிலவாஸ்து என்னுமிடத்தில் சுத்தோதனர் என்பவர் செங்கோல் செலுத்தி வந்தார். அவர் நீதியிற்சிறந்தவராயும்,

குடிகளின் நன்மையை நோக்கியவராயும், நடுவு நிலைமை வாய்ந்தவராயும் வாழ்ந்து வந்தார்.

3. கோலியர் மரபைச் சேர்ந்த இரு அரச மங்கையர் அவருக்கு இல்லக் கிழத்தியராய் அமைந்தனர். நெடுநாள் மக்கட்பேறில்லாத துன்பம் அவர்களை வருத்திற்று. குடிகளும் இதனால் வருத்தமுற்றார்கள்.

4. சில்லாண்டுகள் கழிந்தன. பின்பு முதல் மனைவி மாயா தேவி கருவுற்றனள். அவள் பிள்ளைப் பேற்றின்பொருட்டுத் தாயார் வீட்டுக்குச் செல்லும் வழியில் ஓர் ஆண் மகவு பிறந்தது. ஆதலின், அத் தாய் கபிலவாஸ்துவிற்கே திரும்பி வர நேர்ந்தது. குழந்தையின் உடலொளியும், முகலக்ஷணமும் யாவருக்கும் ஆனந்தத்தை உண்டாக்கின. நாட்டினர் களிப்புக் கடலிலாழ்ந்தனர். மன்னரது மகிழ்வு சொல்லுந் தரமுடையதன்று. அவர் பலருக்கும் தான தருமங்களை வழங்கினர். ஆயினும், இவ்வின்பத்துக்கிடையில் ஒரு துன்பம் சூழ்ந்தது. குழந்தையை ஈன்ற அரசி ஏழாம் நாள் உயிர் நீத்தாள். இத்துன்பம் அரசரையும் நாட்டையும் ஆருத்துயரில் ஆழ்த்தியது.

5. பின்பு காலமும், பிறந்த இளங்குழவியும் அவர்கள் மனக்கவலையைச் சிறிது சிறிதாக ஆற்றின. திருவின் அருளைப் பெற்று விளங்கிய குழந்தைக்குச் 'சித்தார்த்தர்' என்னும் பெயர் சூட்டப்பட்டது. இளஞ்சிசு சிற்றன்னையால் செல்வமாக வளர்க்கப்பட்டது.

6. சித்தார்த்தர் அரசர் கலையையும், பொதுக் கலையையும் நன்கு கற்ருர். இவர் கற்றதோடு நில்லாமல், அதன்படியே ஒழுகியது யாவருக்கும் மகிழ்வை ஊட்டியது. சித்தார்த்தர் குடிகளிடம் மிக்க அன்பும், அறத்தில் பெரிய ஆர்வமும் கொண்டிருந்தார். யாவரும் இவர்மாட்டு விருப்பம் கொண்டனர். இவருக்கு மணப்பருவம் நெருங்கியதும், சுத்தோதனர், கோலியர் வமிசத்து அரச



கௌதம புத்தர்

குமாரியான யசோதரை என்பவளை மணம் புரிவித்தனர். இருவரும் உயிரும் உடலும் போன்றும், நகமும் சதையும் போன்றும் கெழுதகை அன்புடையராய் வாழ்ந்து வந்தனர். இம்முறையில் பத்தாண்டுகள் கழிந்தன.

7. இளமையிலேயே சித்தார்த்தர் துறவு உள்ளமுடையவராயிருந்தார். தம் சுகவாழ்விலோ,

அன்றி அரசச் செல்வத்திலோ இவர் உள்ளம் அதிகப்பற்றுக் கொண்டிலது. மக்களின் துயர் நிலையைக் காண்பாராகில், அதைத் தீர்த்தற்கு வழி யாது என்பதையே இவர் சிந்தை சிந்தித்துக் கொண்டிருக்கும். பெரும்பான்மையும் அமைதியும் மௌனமுமே இவரிடம் குடி கொண்டிருந்தன. யாரிடமும் இவர் அதிகமாகப் பேசுவதில்லை. சித்தார்த்தரது துறவு மனநிலை சுத்தோதனருக்கு மிக்க கவலையை அளித்தது. அரசிற்கு ஒரே புதல்வரான இவரது நிலையும், நாட்டின் கதியும் என்னுகுமோ என்னும் எண்ணம் அவர் மனத்தைப் பெரிதும் வாட்டிற்று. ஆதலின், அவர் தாம் எவற்ருல் புதல்வரை இன்பமூட்டி உலக ஆசையில் இழுக்க முடியுமோ, அவற்றையெல்லாம் கையாண்டு பார்த்தனர். சித்தார்த்தரிடம் ஒன்றும் சித்தித்திலது.

8. "உலகில் மக்கள் படும் துன்பத்தைப் போக்குதற்கு நெறி யாது? பிறப்பு இறப்புக்களை ஒழித்தற்கு மார்க்கம் என்ன? ஏன் மனிதன் என்றும் இன்புற்று வாழ்தற்கு வழி தேடுதல் கூடாது?" என்றெல்லாம் சித்தார்த்தர் ஆராய்ந்துகொண்டிருந்தார். இவர் இந்நிலையிலிருக்குங்கால், இவருக்கு ஒரு மகன் தோன்றினன். அவ்வானந்தச் செய்தியும் இவருக்கு ஆனந்தத்தை அளித்திலது. "இவ்வுலகப் பற்றிலிருந்து நாம் விடுபடும் காலம் எதுவோ!" என இவர் உள்ளம் ஆற்ருமையில் ஆழ்ந்தது.

9. அத்தகைய காலம் சீக்கிரமே நெருங்கிற்று. ஒரு நாள் வெளியே பவனி வருகையில், கோலூன்றித் தள்ளாடி நடக்கும் தொண்டு கிழவன், தொழு நோயாளன், எல்லாப் பற்றுக்களையும் அறவே விட்ட துறவி ஆகிய மூவரும் இவர் கண்ணிற்குக் காட்சி அளித்தனர். இக்காட்சி ஏற்கெனவே மக்களது துன்பநிலைக்கு வருந்திக்கொண்டிருந்த இவர் மனத்தைப் பெரிதும் வாட்டிற்று. ஆதலின், இவர், "நாம் உடனே ஒரு தனி இடத்தை நாடிச் சென்று, இவற்றைப்போக்க வழியைக் கண்டு உலகிற்பரப்புதல் வேண்டும். நம் நலத்தை விட்டாலல்லாமல், நாட்டை நலமுறச்செய்ய முடியாது," எனத் தீர்மானித்தார். தம் அருமை இல்லாளாகிய யசோதரையும், அன்புக்குழவியும் அயர்ந்து நித்திரையில் ஆழ்ந்திருக்கும் ஒரு நள்ளிரவில், இவர் அவர்களைப் பன்முறையும் உற்றுப்பார்த்து, அவர்களிடம் பிரியா விடை கொள்பவர் போன்று, தம் குதிரையின்மீது இவர்ந்து, அந்நாட்டை விட்டு அகன்றனர்.

10. இவர் மகத தேசத்தின் மலைக்குகைகளில் தவம் புரிந்த முனிவர்களிடம் வைதிக சமயக் கொள்கைகளையும், வைசாலி நகரத்தில் வாழ்ந்த ஓர் அந்தணரிடம் சாத்திரங்களின் உண்மைப் பொருளையும் கற்றார். அவற்றாலும் இவர் மனம் அமைதி பெற்றிலது. ஆதலின், தாமே ஓரிடத்திலிருந்து தவம் புரியத்தொடங்கினர். பல சீடரும் வந்து சேர்ந்தனர். நாட்கள் செல்லச் செல்ல இவர் உடல்

மெலியவே, சீடர்கள் ஒவ்வொருவராக இவரை விட்டகன்றனர்.

11. அதற்கும் இவர் நெஞ்சம் அஞ்சிற்றில்லை. இவர் தனித்துச் சென்று, ஆங்காங்கே ஐயமேற்று உண்டனர். இவர் ஒரு நாள் ஓர் அரச மரத்தடியில் அமர்ந்திருந்த பொழுது, 'நல்லவற்றையே சிந்தித்து, நன்னெறிகளையே கடைப்பிடித்து, செம்மை வழியிலேயே ஒழுகுபவன் என்றும் துன்பமின்றி இன்பத்தையே எய்தி வாழலாம்,' என்னும் எண்ணம் இவர் மனத்துதித்தது. அதற்குரிய நுண் பொருள்களையும் இவர் ஆராய்ந்தார். இத்தகைய ஞானத்தைப் போதிப்பதற்கு அவ்வரச மரம் காரணமாயிருந்தமையின், அதற்கு மகாபோதி என்ற பெயர் ஏற்பட்டது. அன்றையிலிருந்தே இவருக்குப் புத்தர் என்னும் பெயர் வழங்கலாயிற்று.

12. இவர் காசிக்குச் சென்று, தம்முடைய கொள்கைகளை அங்குள்ளார் பலருக்கும் உபதேசித்தார். சில மாதங்களில் இவருக்குப் பல சீடர்கள் ஏற்பட்டார்கள். இவர் அவர்களைப் பல திக்குகளுக்கனுப்பி, தம் கொள்கைகளைப் பரப்புமாறு செய்தார். பலர் இவருடைய அரிய கொள்கைகளினால், புத்த மதத்தில் சேர்ந்தனர்.

13. புத்தர் மகத தேசம் செல்லுங்கால், ஒரு பெரிய ஆட்டு மந்தை இவர் கண்ணிற்பட்டது. அதில் ஒரு நொண்டியாடு, துன்பமுற்று, நடக்க முடியாமல் சென்றுகொண்டிருந்ததைப் பார்த்துப் புத்தர் அவ்வாட்டைத் தம் தோளின்மீதேற்றி,

அம்மந்தையைத் தொடர்ந்து சென்றார். அம்மந்தை மகத தேச மன்னனான பிம்பிசாரன் இயற்றும் வேள்வியில் பலியிடுவதன்பொருட்டுச் செல்லுகிற தென்பதை அறிந்தார். இவர் மனம் பதைத்து, உடனே விரைந்து அவனிடம் சென்று, அவனுக்கும், மற்றவருக்கும் சீவகாருணியத்தை நன்கு உபதேசித்து, அவர்கள் அக்கொடுந்தொழிலை விட்டுப் புத்த மதத்தைத் தழுவுமாறு செய்தார்.

14. புத்தர் ஒரு முறை தம் தந்தையாரைக் கண்டு பணிந்தார். இவர் சிற்றன்னையும், மனைவியும், புதல்வனும் இவரைப்பணிந்து, துறவு பூண்டனர். இங்ஙனம் பலரையும் நற்கொள்கைகளில் ஈடுபடுத்திய புத்தர், குசி நகரம் என்னும் இடத்தருகில் நிலையான பேரின்ப நிலை எய்தினார்.

15. புத்தரின் கொள்கைகள், ஜீவகாருணியம், வெஃகாமை, பொய்யாமை, மதுவுண்ணாமை, தீநெறி செல்லாமை என்பவை ஆகும். இவற்றைப் பஞ்ச சீலம் எனச் சொல்லுவர். இப்புத்த மதம் சீனா, ஜப்பான், நேப்பாளம், திபேத்து, பர்மா, இலங்கை முதலிய இடங்களிலும் பரவலாயிற்று.

அருஞ்சொற்பொருள் :

அவதாரம் - தெய்விகப் பிறப்பு, இடுக்கண் - துன்பம், இயலாது - முடியாது, உன்மத்தம் - மயக்கம், கெழுதகைமை - உரிமை, நெறி - வழி, இவர்ந்து - ஏறி.

வினாக்கள் :

1. புத்தரின் தந்தையார் யாவர்? அவரைக்குறித்து உனக்கென்ன தெரியும்?

2. புத்தர் பிறந்த போது உண்டான இன்பதுன்பங்கள் யாவை?

3. சுத்தோதனர் தம் புதல்வரைப்பற்றிக் கொண்ட கவலை யாது?

4. சித்தார்த்தர் வெளியேறுவதற்கு முன்பு எண்ணிய எண்ணங்களும் கண்ட காட்சிகளும் யாவை?

5. புத்தருடைய சீவகாருணியத்தை விளக்க ஒரு சான்று காட்டுக.

பயிற்சி :

1. செயப்படுபொருள் குன்றா வினைகள் நான்கு கூறுக.

2. அவதாரம், உன்மத்தம், மகாபோதி - இவற்றை வாக்கியங்களில் அமைக்க.

3. உத்தமர், செங்கோல், நீதி, இல்லறம், அறம், பிரிதல், இறப்பு, நெருங்கல், நித்திரை - இவற்றிற்கு எதிர்ப்பதம் கூறுக.

4. புத்தர் பண்புகளைப்பற்றி ஒரு கட்டுரை வரைக.

# 10. அமுத சுரபி

## காட்சி-1

இடம் : காவிரிப்பூம்பட்டினத்தில் ஓர் உவவனம்

காலம் : காலை

பாத்திரங்கள் : மணிமேகலை, சுதமதி, உதயகுமரன், மணிமேகலா தெய்வம்

[மணிமேகலையும், சுதமதியும் மலர் கொய்துகொண்டே பேசுகின்றனர்.]

**மணிமேகலை:** சுதமதி, இம்மலர் வனத்தைப்போன்று மாண்பு மிக்கது வேறெங்கும் இல்லை அன்றோ?

சுதமதி: மணிமேகலை, இஃது உண்மையே! அதோ பார்! அங்குத்தெரிகிறதே ஒரு பளிங்கு மண்டபம், அதுவே இச்சோலையின் சிறப்பிற்குக் காரணம். அம்மண்டபம், தன்னுள் இருப்பவர் உருவத்தை மட்டும் வெளியிலுள்ளவர் காணுமாறு செய்யுமேயன்றி, அவர் பேசும் ஓசையை வெளிப்படுத்தாது. அஃதன்றியும், அம்மண்டபத்தில் தாமரைப் பீடிகை ஒன்று உளது. அப்பீடிகையில் அரும்புகளையிட்டால், அவை உடனே மலரும்; மலர்களை வைத்தால், அவை வருடக் கணக்கில் வாடாமலே இருக்கும்.

மணிமே: இரு இரு! (செவி கொடுத்துக்கேட்டு) சற்றுத் தொலைவில் ஏதோ ஓசை கேட்கிறதன்றோ?

சுதமதி: (உற்றுக் கேட்டு) ஆம்! இளவரசர் உதயகுமருடைய இரதம் வரும் ஓசை அது; அவர் வெகு விரைவாகத் தேரூர்ந்து வருகிறார்.

மணிமே: ஆ! சுதமதீ, நான் இப்போது என்ன செய்யட்டும்?

சுதமதி: மணிமேகலை, கவலைப்படாதே! தேர் உவவனத்தின் மதில் வாயிலை அடைந்துவிட்டதே! நீ உடனே போய் அப்பளிங்கறையில் புகுந்துகொள். மற்றதை யான் பார்த்துக்கொள்கிறேன்.

[மணிமேகலை பளிங்கறையில் புகுந்துகொள்ளுகிறாள். உதய குமரன் விரைந்து வந்து சுதமதியின் எதிரில் நிற்கிறான்.]

சுதமதி: (உதயகுமரனைப் பார்த்து) இளவரசர் வாழ்க! வணக்கம்!

உதயகுமரன்: யார்? சுதமதியா? உன்னுடன் மணிமேகலையும் வந்தாளல்லவா?

சுதமதி: யார் சொல்லினர்?

உதய: சுதமதீ, மதயானை ஒன்று மக்களை வருத்தியது. யான் அவ்வேழத்தை அடக்கித் தேரேறி வந்தேன்; வழியில் எட்டிக்குமரன், யாழின் கோட்டைத் தழுவியவனாய், முகத்தில் துயரந் தேங்க, வாளா இருந்தலைக்கண்டேன். அதன் காரணம் யாதென அவனை வினவியதற்கு, "மணிமேகலை துறவுக்கோலம் பூண்டு இவ்வழியே சென்றாள்; அவளைப் பார்த்ததும் கோவலனைப்பற்றிய நினைவு தோன்றி என் மனத்தை வருத்தியது!" எனப் பதில் கூறினான்.

சுதமதி: நீர் மணிமேகலையைத் தேடி வந்தது எதற்கோ?

உதய: சுதமதீ, என்ன ஒன்றுமே தெரியாதவள் போல நடிக்கின்றனையே! யான் அவள் மீது கொண்டுள்ள காதலை, மணிமேகலையின் தாயான மாதவியும், மாதவியின் அன்னையான சித்திராபதியுங்கூட அறிவரே! நீ அறியாதது வியப்பேயாகும்!

சுதமதி: இளவரசரே, சோழன் கரிகாற்பெருவளத்தானுடைய வழித்தோன்றல் நீவிர்! நீவிர்

அறியாத அறம் இல்லை. ஆயினும், ஒன்று உரைப்பேன்; கேட்டருள்க: மக்கள் யாக்கை,

"வினையின் வந்தது; வினைக்குவிளை வாயது;
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது;
மூப்புவிளி வுடையது; தீப்பிணி இருக்கை;
பற்றின் பற்றிடம்; குற்றக் கொள்கலம்;
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை;
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது."

ஆதலின், அறிவுடையவரே, அழியுந்தன்மையையுடைய யாக்கையை விரும்புதல் அறமுணர்ந்தார்க்கு அழகல்லவே!

[உதயகுமரன் பளிங்கறையில் மணிமேகலை இருத்தலைப் பார்த்து]

உதய: அதோ மணிமேகலை! அதோ மணிமேகலை! பளிங்கறையில் பதுங்கி நிற்கிறாள்! இதோ! அவளைத் தாவியெடுத்துத் தேரிலேற்றிச் செல்கிறேன்!

[சுற்றிச் சுற்றி வந்தும் பளிங்கறையின் வாயில் காணப்படாமை கண்டு]

சுதமதி, இப்பளிங்கறை அவளை எத்தனை காலம் தன்னுள் வைத்துப் பாதுகாக்க முடியும்!

சுதமதி: இளவரசரே, அவளைப் பாதுகாப்பது பளிங்கறையன்று; அவள் பூண்டுள்ள தவவொழுக்கமேயாகும்.

உதய: இளமையை அவமதித்துத் தவக்கோலம் கொண்டால், இயற்கை அவளைச் சபியாதோ? சுதமதீ!

சுதமதி: சாபத்தை ஏற்கும்படி மணிமேகலை ஒரு போதும் குற்றஞ்செய்யாள். ஆனல், தன்பால் குற்றஞ்செய்தாரைச் சபிக்க அவளுக்கு வன்மையுண்டு. ஆதலின், நீவிர் அவளை விரும்புதல் தக்கதன்று இளவரசரே!

உதய: சுதமதீ, தத்துவங்களைக் கூறி என்னைப் பித்தனக்க நினைப்பதெல்லாம் போதும்! நான் சித்திராபதியினலேயே என் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வேன்.

[போகிருன்.]

மணிமே: (பளிங்கறையை விட்டு வெளியே வந்து) அம்மம்ம! பெரிய ஆபத்திலிருந்து தப்பினேன்! சுதமதீ, இளவரசரைப்பற்றி நீ என்ன நினைக்கிருய்?

சுதமதி: தவத்தை நாடி நிற்கும் ஓர் இளமங்கையின்பால் அன்பு செலுத்தலும், அவள் இயல் புணராது இழித்துக் கூறலும் செய்யும் அவருடைய தன்மையை முற்றும் வெறுக்கிறேன் மணிமேகலா!

மணிமே: என்னையும், என் மரபையும் இழிவாகப் பேசியிருப்பினும், என்னல் ஏனே அவரை வெறுக்க இயலவில்லை சுதமதீ! என் மனம் தவத்தையே விரும்பினும், உதயகுமரர் பின்னே செல்கிறதே! இதுதான் எனக்கு வியப்பாகத் தோன்றுகிறது தோழீ!

[சுதமதி சிந்தனையில் ஆழ்கின்ருள்.]

மணிமேகலா தெய்வம் : (இருவர் முன் மந்திர மடந்தையைப் போலத் தோன்றி) மங்கையரே, நீங்கள் இங்கேநிற்பதற்குக் காரணம் என்ன? உங்களுக்கு நேர்ந்துள்ள துன்பம் யாது?

சுதமதி : இவ்வூர் இளவரசர் இவண் வந்து, இம் மணிமேகலையைச் சித்திராபதியின் உதவியால் தமக்கு உரிமையாக்கிக்கொள்வதாகக் கூறிச் சென்றார். இதுவே எங்கள் கவலைக்குக் காரணம்.

தெய்வம் : அவ்விளவரசன், 'இது முனிவர்களுடைய தவவனமாதலால், இதில் நாம் இவர்களுக்குத் தீங்கு செய்தல் கூடாது,' என எண்ணியே இச்சோலையை விட்டுச் சென்றனன். அவன் புற வாயிலில் இருத்தலின், நீவிர் இப்போது வெளிச்செல்வீரேல், அவன் மணிமேகலையைக் கொண்டு செல்வன்.

சுதமதி : அப்படியா! நாங்கள் இப்போது என்ன செய்வது?

தெய்வம் : நீவிர் இவ்விரவை அருகிலுள்ள சக்கரவாளக்கோட்டத்தில் கழிப்பீராகில், உமக்கு ஒரு துன்பமும் நேராது.

சுதமதி : அதைச் சக்கரவாளக்கோட்டம் எனச் சொல்லுவதன் காரணம் என்ன?

[மணிமேகலா தெய்வம் அதைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது சுதமதி தூங்கிவிடுகிருள். தெய்வம், மணிமேகலையை மயக்கி, மணிபல்லவத் தீவில் கொண்டு போய் விட்டுவிடுகிறது.]

## காட்சி—2

இடம்: மணிபல்லவத்தீவு
காலம்: விடியற்காலை
பாத்திரங்கள்: மணிமேகலை, மணிமேகலா தெய்வம், தீவதிலகை.

[மணிமேகலை துயில் நீங்கி எழுந்து, சுற்றுமுற்றும் பார்க்கிறாள்.]

**மணிமே:** சுதமதி, சுதமதி எங்கே! நான் எங்கிருக்கின்றேன்! (சிறிது தூரம் நடந்து) இவை என்ன நீல மாக்கடல், நெடுமணற்குன்றங்கள்! ஆ! உவவனத்திலிருந்த யான் இங்கெப்படி வந்தேன்! ஆ! அதோ! காலை ஞாயிறு கதிர் பரப்பி உதிக்கின்றது. இரவு முழுவதும் நான் எங்கே கண் அயர்ந்தேன்? (பெருங்குரல் கொடுத்து) ஐயகோ! ஐயகோ! இங்கே என் சுற்றமும் இல்லை, தோழியுமில்லை! என்னை அறிந்தார் ஒருவரும் இங்கில்லையே!

[அருகில் புத்த பீடிகை இருப்பதைப் பார்த்து, தலைமேற்கரங்குவித்து, மும்முறை வலம் வந்து]

என்ன இது! என் முற்பிறப்பின் செய்தி யாவும் என் மனக்கண் முன் தோன்றுகின்றனவே! முற்பிறப்பில் நான் யார்? இலக்குமியா? என் கணவர்........ஆ! என் கணவர் யார்?

[மணிமேகலைத் தெய்வம் அவள் எதிரே தோன்றிப் புத்த பீடிகையை வணங்கி நிற்கிறது.]

**மணிமே:** (தெய்வத்தை வணங்கி) தாயே, நீ யார்?

தெய்வம் : குழந்தாய், என் பெயரை உனக்களித்த மணிமேகலா தெய்வம் நான். நேற்று உவவனத்தில் மந்திர மடந்தையாய்த் தோன்றியவளும் நானே! இந்தத் தீவிற்கு உன்னைக் கொண்டு வந்தவளும் நானே! இந்த இடத்துக்கு 'மணிபல்லவத் தீவு' என்பது பெயர். இது காவிரிப்பூம்பட்டினத்துக்குத் தெற்கில் உள்ளது. உன் தவப்பயனால் நீ உன் பழம் பிறப்பை உணர்ந்தாயல்லவா?

மணிமே : ஆம், நன்றாய் அறிந்துகொண்டேன்! முற்பிறப்பில் என் பெயர் இலக்குமி; என் கணவரின் பெயர் இராகுலர்; அவர் இப்போது எங்கே பிறந்துள்ளார் தாயே?

தெய்வம் : அந்த இராகுலனே உவவனத்தில் உன்பால் வந்த உதயகுமரன்.

மணிமே : (வியப்புடன்) அப்படியா!

தெய்வம் : முற்பிறப்பின் வாசனையாற்றான் அவன் உள்ளம் உன்னை விரும்பியது; உன் உள்ளமும் அவன்பால் சென்றது. அந்தப்பற்றை மாற்றி நல்வழிப்படுத்தற்காகவே, உன்னை இத்தீவிற்கொணர்ந்து சேர்த்துப் பீடிகையைக் காட்டினேன்; இலக்குமி, இன்னும் கேள்: முற்பிறப்பில் தாரை, வீரை என்னும் இரு தமக்கைமார் உனக்கிருந்தனர். அவர்தாம் இப்போது மாதவியும் சுதமதியும் ஆவர். சில மந்திரங்களை உனக்கு உபதேசிக்கின்றேன். குழந்தாய், வந்து ஏற்றுக்கொள்!

[மணிமேகலை அருகிற்செல்ல, தெய்வம், மந்திரத்தால் அவள் பசியை நீக்குதல், ஆகாயமார்க்கம் செல்லுதல், வேண்டும்போது வேற்றுருக்கொள்ளுதல் ஆகிய மூன்றுக்கும் உதவும் மந்திரங்களை உபதேசிக்கின்றது.]

குழந்தாய், மணிமேகலா, இனி நீ உன் ஊர் போய்ச் சேரலாம். புத்த பீடிகையை வணங்கிப் பயனைப் பெற்றுச் செல்வாயாக.

[மணிமேகலை மெல்ல நடந்து செல்கிருள். தீவதிலகை எதிரில் தோன்றுகிருள்.]

தீவதிலகை : பொற்கொடி போல்வாய், நீ யார்?

மணிமே : முற்பிறப்பில் என் பெயர் இலக்குமி: யான் இராகுலன் என்னும் அரசிளங்குமரனுக்கு மனைவி; இப்பிறப்பில் கணிகையர் குலத்து உதித்த மாதவியின் புதல்வி. என் பெயர் மணிமேகலை. நீ யாரோ?

தீவதிலகை: என் பெயர் தீவதிலகை. நான் இந்திரன் இட்ட கட்டளைப்படி இத்தரும பீடிகையைக் காத்துக்கொண்டிருக்கிறேன். நீ இங்குற்றதனுல், உனது முற்பிறப்பின் வரலாற்றினை அறிந்ததுமட்டுமன்றி அமுதசுரபியையும் அடையக்கூடுமென நினைக்கிறேன்.

மணிமே: அமுத சுரபியா! அதன் பெருமை யாதோ?

தீவதிலகை: ஆம்; அஃது அள்ள அள்ளக் குறையாமல் அன்னத்தையளிக்கும் அட்சய பாத்திரம். அஃது ஒவ்வொரு வைகாசித் திங்கள் பௌர்

ணமியிலும் தன்னை ஏற்றுக்கொள்ளத் தக்க தவத்தினர் வந்துள்ளனரா என்று நோக்கிப் பொய்கையினின்று வெளித் தோன்றும். அதன் வரலாற்றை உன் ஊரிலுள்ள அறவண அடிகளிடம் கேட்டறிவாயாக!

**மணிமே:** இன்று அந்நாள் அல்லவா?

**தீவதிலகை:** ஆம்! இந்நாளே எந்நாளினும் சிறந்த நாள்; புத்தர் தோன்றிய பொன்னுள்! நீ தாமதம் செய்யாதே! உடனே பொய்கையை வலம் வந்து புத்தரை வணங்குக!

[மணிமேகலை பொய்கையை வலம் வந்து புத்தரை வணங்குகிருள். பொய்கையில் அமுத சுரபி தோன்றுகிறது.]

அதோ அமுத சுரபி! அதோ அமுத சுரபி! மணிமேகலா, கையை நீட்டி உடனே ஏற்றுக் கொள் அதனை.

[மணிமேகலை பணிவுடனும் அன்புடனும் தன் இரு கைகளாலும் அதை ஏந்தி நிற்கிருள்.]

மணிமேகலா, இணையற்றது உன் நோன்பு! நிகரற்றது நின் தவம்! இனி நீ உன் ஊருக்குச் செல்வாயாக. இதனைக் கொண்டு மக்களின் வறுமையை நீக்கி, பசியினை ஓட்டி, யாவருக்கும் மகிழ்வை அளிப்பாயாக! செல்க!

[மணிமேகலை மகிழ்வுடன் அமுத சுரபியைக் கையி லேந்திப் புத்தரைப் பாடிக்கொண்டே போகிருள்.]

அருஞ்சொற்பொருள் :

மாண்பு - பெருமை, கதிர்கள் - கிரணங்கள், பீடிகை - பீடம், பளிங்கறை - கண்ணடி அறை, வாளா- ஒன்றுஞ் செய்யாது, பற்று - ஆசை, யாக்கை - உடல், இயலாது - முடியாது.

வினக்கள் :

1. உவவனத்தின் சிறப்பு யாது?

2. சுதமதிக்கும் உதயகுமரனுக்கும் நடந்த சம்பாஷணை யாது?

3. மணிமேகலை மணிபல்லவத் தீவை எங்ஙனம் அடைந்தனள்?

4. மணிமேகலையின் மனம் உதயகுமரன்பால் சென்றதற்குத் தெய்வம் கூறிய காரணம் யாது?

5. தீவதிலகை யார்?

பயிற்சி :

1. மணிமேகலையின் முற்பிறப்பைப்பற்றி எழுதுக.

2. அமுத சுரபியின் சிறப்பை எட்டு வரிகளில் எழுதுக.

3. மணிமேகலைக்குத் தெய்வம் செய்த உதவிகளைக் குறித்து ஒரு கட்டுரை எழுதுக.

## 11. மேட்டூர் அணை

1. உலகில் வாழும் உயிர்களின்பொருட்டு இறைவன் இயற்கைப் பொருள்கள் பலவற்றை அமைத்துள்ளான். அவை ஐம்பொறிகளுக்கும் இன்பத்தையூட்டுதல் மட்டுமே அல்லாமல், வாழ்க்கைக்கும் இன்றியமையாதனவாய் இருக்கின்றன.



மேட்டூர் அணைக்கட்டு

அவற்றுள் பல இருந்தபடியே இருந்து, ஒருவாறு பயனளிப்பினும், மனிதனுடைய கல்வி அறிவு ஆராய்ச்சிகளினால், அவற்றுடன் சிறிது செயற்கை முறையையும் பிணைக்குங்கால், அவை முன்னையினும் பெரும்பயனளித்தலைக் காண்கின்றோம். இதற்கு இயற்கைத் தத்துவமாகிய கடல் நீரைப் பக்குவப்படுத்தி உப்பெடுப்பது போன்ற சில செயல்கள் தக்க சான்றாகும்.

2. உயிர்களுக்கு உணவைக்காட்டிலும் நீர் இன்றியமையாதது என்பது யாவரும் அறிந்ததே. ஆயினும், நதிகளிலும், ஆறுகளிலும், மலைகளிலிருந்து புரண்டு வரும் அருவிகளிலும் பெருகி ஓடும் நீர், கடலில் விழுந்து வறிதே போகுமாறு எத்தனை காலமாகவோ விட்டிருந்தனர். சில ஆண்டுகளுக்கு முன்பே அவ்வெள்ளப் பெருக்கை அணை கோலித் தடுத்து வேண்டும்போது பயன்படுத்திக்கொள்ளும் முறையை அறிவிற்சிறந்தவர் கண்டு பிடித்தனர். அணைகள் உலகில் பல இடங்களிலும் கட்டப்பட்டுள்ளன. அவற்றுள் நம் தமிழ் நாட்டுக்குத் திலகம் போலத் துலங்குவது மேட்டூர் அணையாகும். இது மற்ற அணைகளினும் சாலப் பெரிதாகும்.

3. காவிரி ஆற்றின் நீரோட்டத்தை ஒழுங்கு படுத்தி, தண்ணீர் போதும் அளவு பாய வசதியற்ற நிலங்களுக்கு அதைப் பாயுமாறு செய்வதோடு, தரிசுநிலங்களைப் பண்படுத்தி, அவை விளைநிலங்களாகுமாறு மாற்றி, விவசாயத்தைப் பல வகைகளி

லும் பெருக்குவதே இம்மேட்டூர் அணையின் சிறந்த நோக்கமாகும்.

4. காவிரியாறு மேற்கு மலைத் தொடர்ச்சியிலுள்ள குடகு ராஜ்யத்தில் உள்ள மெர்க்காரா என்னும் இடத்தில் உற்பத்தியாகிறது. அந்த இடம் கடல் மட்டத்திற்கு 4400 அடி உயரத்தில் உள்ளது. இந்நதி ஏறக்குறைய ஐந்நூறு மைல்கள் ஓடி, வங்காளக் குடாக்கடலில் கலக்கிறது.

5. குடகில் ஜூன் மாதம் முதல் செப்டெம்பர் மாதம் வரையிலும் பருவமழை பெய்கின்றதனால், அவ்வமயம் காவிரியில் நீர்ப்பெருக்கு மிக அதிகமாய் இருக்கிறது. மைசூர்ப் பிரதேசங்களில் ஆகஸ்டிலிருந்து நவம்பர் முடிவதற்குள் பருவமழை பெய்கிறது. அதனால் ஏற்படும் பெருவெள்ளம், ஹேமவதி, லக்ஷ்மண தீர்த்தம், அர்க்காவதி என்னும் சிற்றாறுகளை நிரப்புகிறது. அவ்வாறுகள் அந்த நீர் வெள்ளத்தைக் காவிரியில் கொண்டு வந்து சேர்க்கின்றன. இங்ஙனம் நீரால் நிரம்பப்பெற்ற காவிரி, மலைப்பிரதேசங்களின் வழியாக ஓடி, மேட்டூருக்கு அருகிலுள்ள சமவெளியில் பாய்கிறது. மற்ற இடங்களில் அக்டோபர் முதல் ஏறக்குறைய நான்கு மாதங்களில் பெய்யும் மழையால் காவிரியில் பின்னும் வெள்ளம் பெருகுகின்றது. அன்றியும், பவானி, நொய்யில், அமராவதி ஆகிய ஆறுகளும் காவிரியில் வந்து கலக்கின்றன. இவற்றால் காவிரி என்றும் வற்றாத நீர்ப்பெருக்கைப் பெற்றிருக்கிறது.

6. இக்காவிரியாறு திரிசிராப்பள்ளிக்கு மேற்கே பத்து மைல் தொலைவில் இரண்டாகப் பிரிகிறது. அவ்வாறு பிரியும் வடபகுதிக்குக் கொள்ளிடம் என்றும், தென்பகுதிக்குக் காவிரி என்றும் பெயர்கள் வழங்குகின்றன. கொள்ளிடத்திற்கு ஒரு செய்கரை அமைக்கப்பட்டிருக்கிறது. காவிரியும் கொள்ளிடமும் இருபது மைலுக்கு நெருங்கி ஓடுகின்றன. அங்கு ஒரு கல்லணை போடப்பட்டிருக்கிறது. அக்கல்லணையின் வடிகால் கொள்ளிடத்தில் பாய்கிறது. அவ்விடத்தில் காவிரி நதி, காவிரி, வெண்ணாறு, கல்லணைக் கால்வாய் என மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூர் ஜில்லாவின் முக்காற்பகுதியைக் காவிரியும் வெண்ணாறும், காற்பகுதியைக் கல்லணைக் கால்வாயும் வளம் படுத்துகின்றன.

7. காவிரியாற்றுக்கு இத்தனை வகையால் நீர்ப்பெருக்கிருந்தும், சில போது பருவமழை இன்மையால், நீர் குறைந்துவிடும்; அல்லது அதிக மழையினால், கரைகள் உடைந்து, பயிர்களை அடித்துக்கொண்டு போதல், அழுகச் செய்தல் முதலிய நஷ்டங்கள் ஏற்படும். இக்குறைகளைப் போக்குவதற்கு ஏற்ற உபாயங்களைத் தேட வேண்டும் என்னும் விருப்பம் இந்நாட்டினருக்குப் பழைய காலத்திருந்தே இருந்து வந்தது. சர் ஆர்தர் காட்டன் என்பவர், காவிரி ஆற்றின் நீர்ப் பெருக்கை ஒழுங்கு படுத்தினாலன்றி மக்களுக்கு நன்மை ஏற்படாதெனக் கருதி, 1836-ஆம் ஆண்டில் கொள்ளி

டத்தில் மேலணை என்னும் ஓர் அணையைக் கட்டுவித்தார். அதனால், கொள்ளிடத்தில் பெருகும் நீர் காவிரியில் திருப்பப்பட்டது. அச்செயல் கொள்ளிடத்தின் நீர்ப்பெருக்கைக் குறைப்பினும், காவிரியில் வெள்ளம் மிகுந்து அதன் கரைகளை உடைத்து மிக்க அழிவை உண்டாக்கிற்று. அதைத் தடுக்க 1845-ஆம் ஆண்டில், காவிரியின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டது.

8. இங்ஙனம் அப்போதைக்கப்போது உண்டான அமைப்புக்களால் பல குறைகள் நீங்கின. ஆயினும், அவற்றால் பெரும்பயனை அடைய முடியவில்லை. காவிரியின் நீர்ப்பெருக்கு, சிறந்த முறையில் ஒழுங்கு பட்டுத் தஞ்சை ஜில்லா பல பயன்களையும் பெற வேண்டுமாயின், காவிரியின் மேற்பகுதியில் ஒரு பெரிய நீர்த் தேக்கம் அமைத்தல் இன்றியமையாதது என அரசாங்கத்தினர் தீர்மானித்தனர். இவ்வணையை அமைப்பது காவிரியிலா அல்லது பவானியிலா என்னும் ஐயம் உண்டாயிற்று. இறுதியில் பல ஆராய்ச்சிகளினால் காவிரியில் அணை கோலுவதே அதிக பயனைத் தரும் என்னும் முடிவிற்கு வந்து, 'கர்னல் எல்லிஸ்' என்பவர் இதற்கு ஒரு திட்டத்தை வகுத்தார்.

9. இதைக் கேள்வியுற்ற மைசூர் அரசாங்கம், தன் நாட்டிலுள்ள கிருஷ்ண ராஜ சாகர அணையைச் சிறிது உயர்த்திக்கொள்ளப்போவதாகக் கூறிற்று. இதனால், காவிரி அணைக்குப் பெரிய நன்மை ஏற்படாதாகையால், இவ்விஷயம் ஆராய்ச்சியில்

இருந்தது. அவ்வமயம் ஐரோப்பிய மகாயுத்தமும் தொடங்கிற்று. அதனால், அவ்வேலை தடைபட்டது. பின்பு ஸர். சி. பி. இராமசாமி ஐயர் அவர்களுடைய பெருமுயற்சியினால், இரு அரசாங்கத்தாரும் நன்மை உண்டாகும் முறையில் ஒரு முடிவு செய்து, 1928-ஆம் ஆண்டு அணை வேலை தொடங்கப்பட்டது.

10. இவ்வணை கருங்கல்லின் சிறு துண்டுகளோடு சிமிட்டியைக் கலந்து செய்யப்பட்ட பெரிய பெரிய பாறை அச்சுக்களால் கட்டப்பட்டது. இவ்வணையின் நீளம் ஒருமைல் இருபது அடி; பரப்பு அறுபது சதுரமைல். நீர்ப்பெருக்கத்தை ஒழுங்கு படுத்த அணையில் பல அமைப்புக்கள் உள்ளன. ஆறு நிரம்பி மேல் வழியும் நீர் ஓடுதற்கு 810 அடி நீளத்தில் ஒரு வடிமடை கட்டப்பட்டுள்ளது. வெள்ளப்பெருக்கு அதிகமாய் இருக்கும்போது அந்நீரை வெளியில் செலுத்துதற்குக் கடல் மட்டத்திற்கு 770 அடி உயரத்தில் பதினாறு மதகுகள் இருக்கின்றன. இவைகளை அல்லாமல், கடல் மட்டத்திற்கு 730 அடி உயரத்தில் எட்டு மதகுகளும், 670 அடி உயரத்தில் ஐந்து மதகுகளும் இருக்கின்றன. இவை முறையே மேல் மதகுகள் என்றும், கீழ்மதகுகள் என்றும் சொல்லப்படுகின்றன. ஒருகால் தண்ணீர் 770 அடிக்குக் கீழ் இறங்கிவிடின் மேல் மதகுகளும், 730 அடிக்குக் கீழ் இறங்கிவிடின் கீழ் மதகுகளும் திறந்து விடப்படும். ஆனால், அதற்கு அவசியம் பெரும்பாலும் ஏற்படாதெனக் கரு[illegible]கின்றனர்.

11. இந்நீரினல் உண்டாகும் மின்சாரச் சத்தி, விளக்குகள் எரியவும், இயந்திரங்களை இயக்கவும் பயன்படுத்தப்படுகிறது. இதைக்கொண்டு இன்னும் பல காரியங்களைச் செய்தற்குத் திட்டம் வகுத்துக்கொண்டிருக்கின்றூர்கள். இம்முறையில் மேட்டூர் அணை பயிர்களை வளர்ப்பதற்கு மட்டுமே அல்லாமல், இன்னும் பல செயல்களுக்கும் நலமளிப்பதாயுள்ளது என்பதை அறிகின்றோம்.

அருஞ்சொற்பொருள் :

ஐம்பொறி - (உடல், கண், காது, வாய், மூக்கு என்னும்) ஐந்து இந்திரியங்கள், ஊட்டுதல் - உண்பித்தல், பிணைத்தல் - சேர்த்தல், வறிது - வீணாக, கோலி - செய்து, துலங்குவது - விளங்குவது, சால் - மிக, தரிசு - ஒன்றையும் விளைவிக்க முடியாத காய்ந்த நிலம், செய்கரை - மக்களால் செய்யப்பட்ட கரை.

வினுக்கள் :

1. நீரின் பயன்கள் யாவை ?
2. மேட்டூர் அணையின் சிறந்த நோக்கமென்ன ?
3. காவிரியாறு என்றும் வற்ருத சீவநதியாயிருப்பதற்குக் காரணம் என்ன ?
4. தஞ்சாவூர் மிக்க செழுமை வாய்ந்திருப்பது ஏன் ?
5. காவிரியின் வெள்ளப்பெருக்கை ஒழுங்குபடுத்துதற்கு மேற்கொண்ட செயல்கள் யாவை ?
6. ஸர். சி. பி. இராமசாமி ஐயர், கர்னல் எல்லிஸ் ர்கள் செய்த நன்மைகள் யாவை ?
காவிரியில் வந்து கலக்கும் ஆறுகள் எவை ?

